

# பால ராமாயணம்



வானொலி அண்ணா

ர. அய்யாசாமி



புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

135, பவழக்காரத் தெரு - சென்னை-1

# பதிப்புரை

உலகப் பெருங் காவியங்களில் ராமாயணத்துக்கு என்றுமே ஒரு தனி இடம் உண்டு. நம் பாரதத்தின் பழம் பெருமையை எடுத்துக் கூறும் ஒப்பற்ற காவியம் ராமாயணம்.

உலகை உய்விக்க வந்த உத்தமனும் ராமபிரான், மனித இனம் மாண்புநெறியில் செல்ல வாழ்ந்துகாட்டிய அருள்வள்ளல். கற்புநெறி காத்த கடவுள் நங்கை சீதா பிராட்டி, பொறுமைக்கு இருப்பிடமான புண்ணியச் செல்வி.

இருவரின் ஏற்றம் கூறும் ராமாயணம் நம் தாயகத்தே பல மொழிகளில் செய்யுள் வடிவில் எழுதப்பட்டது. கவிச் சக்கரவர்த்தியாம் கம்பர் இப்பெருங் காவியத்தை இனிய தமிழில் பாடிய பெருமையைப் பெற்ருர். ஆனல் பேரிலக்கிய மான ராமாயணத்தைக் காவிய வடிவில் கண்டு இன்புறும் பேறு சிறுவர் சிறுமியர்க்கு இதுவரை வாய்க்கவில்லை.

தமிழன்னையின் கண்மணியாம் · கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்கள் தம் இறுதிக்காலத்தே கூறிய ஒரு வார்த்தை இன்று நினைவுக்கு வருகிறது.

"ராமாயணத்தைத் தமிழகத்துச் சிறுவர் சிறுமியரும் விரும்பிப் படிக்கும் வண்ணம் இனிய எளிய நடையில் ஒரு தொடர்நிலைச் செய்யுளாகப் பாடுமாறு நான் தமிழ்க் கவிஞர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.'' இதுதான் கவிமணியவர்களின் தணியாத வேட்கை.

கவிமணியவர்களின் கனவு நனவாகும் வகையில், பாலராமாயணத்தை இயற்றித் தமிழன்னைக்கு ஒரு புதிய அணியைச் சூடியுள்ளார் வானெலி அண்ணு திரு. ர. அய்யாசாமி அவர்கள்.

பாலராமாயணம் சென்னை வானெலி மூலம் தேனெலி யென ஒலிபரப்பப்பட்ட காவியச் சித்திரம். 'பாப்பா மலர்' மலரும் நேரத்தே பாப்பாக்கள் மட்டுமல்லர்; பெற்ருேரும் மற்ருேரும் வானெலிப் பெட்டியருகில் ஆயிரம் ஆயிரமாகக் கூடிச் சுவைத்த இலக்கியப் படைப்பு. இந்தச் சிறுவர் காவியத்தைக் கண்ணைக் கவரும் வண்ணப் படங்கள்

நிறைந்த அழகுப் புத்தகமாக வெளியிடும் பேறு பெற்றமைக்கு நாங்கள் பெருமைப்படுகிறோம்; பெருமிதம் அடைகிறோம்.

அருமையும் பெருமையும் பொருந்திய இந்தப் புனிதமான புத்தகத்தை எங்கள் பதிப்பக நூலாக வெளியிட வாய்ப்பு அளித்த திரு. ர. அய்யாசாமி அவர்களுக்கும், இப்புத்தகம் அச்சாகும் காலத்து உடனிருந்து அச்சுத்தாள்களை ஒப்புநோக்கிச் செம்மையுறத் திருத்தி யுதவிய எங்கள் பதிப்பகப்புலவர் திரு. தணிகை உலகநாதன் அவர்களுக்கும் பாடல்களுக்கேற்ற உயிரோவியங்களைத் தீட்டி யுதவிய ஓவியர் திரு. வினு அவர்களுக்கும் எங்கள் உளமார்ந்த நன்றி என்றும் உரியதாகும்.

பக்திச் சுவைக்காக ஒருமுறை, பாடல் நயத்துக்காக ஒருமுறை, சந்த இன்பத்துக்காக ஒருமுறை எனப் பலமுறை, யாவரும் படிக்கவேண்டிய இலக்கியச் செல்வம் பாலராமாயணம்.

பெருங்காப்பியங்கள் பலவற்றை நல்லணிகளாகப் பூண்டு, பொலிவுடன் விளங்கும் நம் தமிழன்னையின் பொன்னடிகளில் இச்சிறுவர் காப்பியத்தைப் படைக்கிறோம்.

சித. இராமநாதன்

# முன்னுரை

ராமாயணம் ஒரு பாற்கடல்; பாரத மக்கள் அனைவரும் அதில் அமுதம் பருகி உள்ளனர். தமிழில் கம்பராமாயணம் இணையில்லாத இலக்கிய விருந்து. கற்பவர்களுக்குப் பேரின்பம் தரும் அற்புதக் காவியம்:

ராம காதையைக் கம்பன் ‘ஆசை பற்றி’ எழுதினான். அது போன்ற ஓர் ஆசை என்னுள்ளும் நீண்ட நாட்களாகக் குடிகொண்டிருந்தது. சிறுவர்களும் ஸ்ரீராம சரிதம் என்னும் அமுதத்தைப் பருகி ஆனந்தம் அடைய வேண்டும் என்ற ஆவலே அது. அதன் விளைவாக உருவானதுதான் பால ராமாயணம்.

குழந்தைகளுக்குத் தொடர்நிலைச் செய்யுளாகத் தமிழில் நீண்டகாவியம் இல்லாத குறைபாட்டையும் பாலராமாயணம் நீக்குகிறது. குழந்தை இலக்கியத்தில் இது ஒரு புதுமுயற்சி.

சின்னஞ்சிறு வயது முதற்கொண்டே எனக்குக் கம்ப ராமாயணத்தில் அளவற்ற ஈடுபாடு உண்டு. அது, என் தந்தை எனக்கு அளித்த வற்றாத ஆர்வம். அவர் நாட்டிய அடிக்கல்லின்மீதே என்னுடைய இலக்கிய முயற்சி வளர்ந்து வளம் பெற்றிருக்கிறது.

பாலராமாயணத்தை எழுதும்போது எனக்கு உறு துணை நின்றவை இரண்டு.

ஒன்று ஸ்ரீராமனுடைய திருவருள். மற்றொன்று கணம் தோறும் நான் கண்கூடாகக் கண்டது: செந்தமிழ் அறியும் செல்வக் குழந்தைகளின் இடையறாத அன்பு.

அவர்களுடன் தொடர்பு கொள்ளும் அரிய வாய்ப்பை வழங்கியது சென்னை வானொலி நிலையம். பாலராமாயணத் தின் மூலம் அந்த உறவு புதிய எழில் பெற்றது. கதையின் ஒவ்வொரு பகுதியையும் எழுதி முடித்தவுடன், பல பிரதிகள் எடுத்தேன்; அவ்வப்போது சந்திக்க நேர்ந்த சிறுவர் சிறுமிய ரிடம் கொடுத்தேன்; புரியாத சொற்களையும் கருத்துக்களை யும் அவர்கள் எடுத்துக்காட்ட, தேவைப்பட்ட இடங்களில் கவிதைகளை மாற்றினேன்.

உதாரணமாக:

கௌசிகனுடைய வேள்விச்சாலையில் ராமனும் லக்ஷ் மணனும் காவல் நிற்கிறார்கள். அழிக்கும் எண்ணத்துடன்

அரக்கர்கள் வருகிறுர்கள். முனிவர்கள் அஞ்சி நடுங்குகிறுர்கள். ராமன் வில்லே எடுக்கிருன்:

அஞ்சினர் முனிவர் வந்தார் ;
அபயம்என் றழுது நின்ருர் ;
வெஞ்சினம் பெருகக் கையில்
வில்லினே எடுத்தான் ராமன்.

என்று எழுதினேன். அதைப்படித்த ஒரு சிறுமி, "ராமனுடைய வில்லுக்கு ஓர் அடைமொழி தேவை" என்று குறிப்பிட்டாள். அதை மேற்கொண்டு, புதிய கவிதையும்பிறந்தது.

அஞ்சினர் முனிவர் வந்தார் ;
அபயம்என் றழுது நின்ருர்;
வெஞ்சினம் பெருக வாங்கி
வெற்றிவில் வளேத்தான் வீரன்.

இதுபோலப் பல நிகழ்ச்சிகளேயும் நான் குறிப்பிட முடியும். சிறுவர்களுக்காக உருவான ஒரு நூலில், அவர்களுடைய கருத்துக்களும் இடம் பெற்றன என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம்தானே ?

எழுதத் தொடங்குமுன் நான் தயங்கினேன். பெரிய காவியம்; அரிய கதை; குறையொன்றும் ஏற்பட்டு விடக் கூடாதன்ருே ? அந்தத் தயக்கத்தைப் போக்கி, எனக்குத் தூண்டுகோலாக நின்றவர், நண்பர் திரு. பூவண்ணன். குழந்தை இலக்கியத்துறையில் பெரும்புகழ் பெற்றவர். அவருடைய அனுபவமும் எனக்கு உறுதுணே ஆயிற்று.

எழுதி முடித்த கவிதைகளேச் சீர்தூக்கி, ஆணித்தரமாக மதிப்புரை வழங்கியவர், எனக்கு உடன்பிறவாத தம்பியாக வாய்த்திருக்கும் திரு. ஏ. ஏ. ஹக்கீம்; இலக்கியத்தின் சுவைதேர்ந்தவர்; எழுத்திலும் வல்லவர்; பாலராமாயணம் முழுவதும் அவருடைய எண்ணத்தின் வண்ணம் விரவிக் கிடக்கிறது.

செய்யுட்களின் இலக்கணத்தை ஒப்புநோக்க உதவி நின்றவள் என் அருமை மகள், பேராசிரியை, ஜ்வாலா ஜயராம்; அவள் யாப்பிலே புலமை மிக்கவள் ; என்னேப் போலவே கவிதையிலும் பற்றுக்கொண்டவள்.

வால்மீகி ராமாயணத்தை, லவனும் குசனும் 32 நாட்கள் பாடியதாக ஒரு வரலாறு உண்டு. அதை அடிப்படையாக வைத்துப் பாலராமாயணத்தை 32 பகுதிகளாகப் பிரித்தேன்.

1964ஆம் ஆண்டு ஜுலை மாதம் 12ஆம் நாள், சென்னை வானொலி நிலையத்தின் குழந்தைகள் நிகழ்ச்சியான பாப்பா மலரில், 'பிறந்தது புது யுகம்' என்ற தலைப்பில் முதற்பகுதி ஒலிபரப்பாயிற்று.

பாலராமாயணத்துக்கு இசையமைத்தவர், கலைஞர் மல்லிக். ஸ்ரீராமனிடம் நீங்காத அன்பு கொண்டவர். அந்த அன்பே, அவர் புனைந்த அற்புதமான இசையாக மலர்ந்தது.

பல ஆண்டுகள், பாப்பா மலருடன் வளர்ந்து பால ராமாயணத்துக்கு அழகிய ஒலிவடிவம் கொடுக்கும் பேறு பெற்றவள் ஜயஸ்ரீ. இயல்பான இனிய குரலும் தெளிந்த உச்சரிப்பும் அவள் உடன்பிறந்த சொத்து.

1965ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 19ஆம் நாள், பாப்பா மலரில், ஸ்ரீராமனுக்கு 'முடிசூட்டு விழா' நடைபெற்றது.

ஆனல், ஸ்ரீராமனுடைய திருக்கதைக்கு முடிவு ஏது? ஒலிவடிவம் பெற்ற பாலராமாயணம் நடன வடிவம் பெற்றது; இன்று வரி வடிவமும் பெறுகிறது. இப் புத்தகத்தை மிகச்சிறந்த முறையில் வெளியிட்ட புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட் பதிப்பகத்தாருக்கும், குறிப்பாக, திரு. சித. இராமநாதன் அவர்கட்கும் நான் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறேன்.

பால ராமாயணத்தின் முதல் செய்யுளை எழுதும்போதே நான், திருமுக தரிசனம் பெற்றேன்.

"கங்கையின் கரையும் தென்கடல் முனையும்
காலிணை படிய நடந்தளம் பெருமான்,
பொங்கிய கருணைப் புன்னகை நிழலில்
புண்ணிய பாரத மக்களை இணைத்த"

ஸ்ரீராமனுடைய திருமுகத்தைத்தான் குறிப்பிடுகிறேன். அவன், பாரதநாட்டு ஒருமைப்பாட்டின் உயிர்நாடி; இணையற்ற வீரன்; கருணை வள்ளல்; அரிய மைந்தன்; பெரிய மன்னன்; உற்ற நண்பன்; உயிர்த்துணைவன்.

அவனுடைய கதையைப் படித்துப் பயன்பெறும் குழந்தைகள் அனைவர்க்கும் இந்த நூல் காணிக்கை.

ர. அய்யாசாமி

# பொருள் அடக்கம்


| பொருள் | | பக்கம் |
|---|---|---|
| பிறந்தது புதுயுகம் | ... | 9 |
| கடமை அழைத்தது | ... | 13 |
| முதல் போர் | ... | 17 |
| வேள்வி காவல் | ... | 21 |
| மிதிலைக் காட்சி | ... | 25 |
| சீதை திருமணம் | ... | 31 |
| வில் விளையாட்டு | ... | 37 |
| கூனி தோன்றினாள் | ... | 43 |
| தாயுரை கொண்ட தனயன் | ... | 49 |
| தேர் திரும்பியது | ... | 55 |
| உடன்பிறவா உத்தமன் | ... | 63 |
| தம்பியின் துயரம் | ... | 71 |
| அரசிருந்த பாதுகை | ... | 77 |
| அமைதி காத்த அண்ணல் | ... | 85 |
| வஞ்சமகள் வந்தாள் | ... | 93 |
| இலங்கையில் அழுகுரல் | ... | 101 |
| மாயப் பொன்மான் | ... | 109 |
| ஜடாயுவின் கடும் போர் | ... | 117 |
| வானர நண்பர் | ... | 125 |
| வாலியின் வீழ்ச்சி | ... | 133 |
| சேனையின் அணிவகுப்பு | ... | 141 |
| கடல் கடந்த தூதன் | ... | 149 |
| உயிர் தந்த மோதிரம் | ... | 157 |
| அழிந்தது பூம்பொழில் | ... | 165 |
| அனுமன் இட்ட தீ | ... | 171 |
| அலைமேல் அணை | ... | 179 |
| அங்கதன் தூது | ... | 189 |
| களத்திலும் கருணை | ... | 199 |
| நாக பாணம் | ... | 207 |
| மருந்து மலை | ... | 215 |
| இறுதி அம்பு | ... | 223 |
| முடிசூட்டு விழா | ... | 235 |

# பிறந்தது புது யுகம்!

கோசலம் என்ருெரு மாநிலமாம்;
 கோமான் தசரதன் மன்னவனும்;
காசினி முழுவதும் ஒளியூட்டும்
 கதிரோன் மரபில் உயர்ந்தவனும்.

நீதியும் அன்பும் நல்லறமும்
 நீங்கா நெஞ்சம் கொண்டவனும்;
தாதையர் ஆண்ட அயோத்தியிலே
 தன்நிகர் இன்றி வாழ்ந்தவனும்.

வீடும் வயலும் நெல்லாக,
 விருந்து மாந்தர் தொழிலாக,
நாடும் நகரும் கலையாக,
 நல்அர சாட்சி புரிந்தவனும்.

மங்கையர் கோசலை, கைகேயி,
 மாது சுமித்திரை, எனமூவர்
செங்கோல் வேந்தன் தேவியராம்;
 திருவும் கனிவும் பூண்டவராம்.

## மன்னன் மனக்குறை

குறைவே இல்லா மன்னற்கும்
குழந்தை இல்லாக் குறையுண்டாம்;
அறிவே நிறைந்தான் ஆனாலும்,
ஆறாத் துயரம் கொண்டானே.

குழந்தைச் செல்வம் கூடிவரக்
குலகுரு வசிஷ்ட மாமுனிவன்,
"விழைந்து, தெய்வத் தீமூட்டி,
வேள்வி செய்க," எனச்சொன்னான்.

## அதிசய அமுதம்

அருமறையின் பொருளுணர்ந்த பெரியோன் சொல்ல
அடிபணிந்து, தசரதனும் விரைந்து சென்றான்;
கருதரிய பெருவேள்வி நிறைவு கொள்ளக்
கலைக்கோட்டு முனிவனையும் அழைத்து வந்தான்.

ஒருவருஷம் மாமுனிவன் வேள்வி காத்தான்;
உடன்இருந்து மன்னவனும் நோன்பு நோற்றான்;
திருவுடைய அமுதம்ஒரு தட்டில் ஏந்திச்
செந்தணலில் பெரும்பூதம் தோன்றக் கண்டார்.

மண்ணின்மிசை அமுதத்தை வைத்த பின்னர்,
வந்தவழி மறைந்ததுவே சிவந்த பூதம்;
கண்ணிரண்டும் ஆனந்த வெள்ளம் பாயக்
காவலனும் கைகூப்பித் தொழுது நின்றான்.

## மக்கள் நால்வர்

மாமுனிவன் ஆணையிட, அரசன், மூன்று
மனைவியர்க்கும் அமுதத்தைப் பகிர்ந்து தந்தான்;
கோமகளிர் கருவுற்றார்; நாளும் நன்மை
கொண்டாடி, ஈரைந்து மாதம் நின்றார்.

கோசலையும் ராமனையே பெற்றாள்; மன்னும்
குலமகளும் பரதனைக் கைகேயி ஈன்றாள்;
ஆசையுடன் லக்ஷ்மணன்சத் துருக்நன் என்பார்
ஆரணங்கு சுமித்திரையின் மக்கள் ஆனார்.

மன்னர்பிரான் நீராடி முரசம் ஆர்ப்ப,
மைந்தர்முகம் கண்டு,மன மகிழ்வு கொண்டான்.
பொன்னனைய புதியயுகம் பிறந்த தென்றே
புவிமகளும் குறைதீர்ந்த பொலிவு பூத்தாள்.



## கடமை அழைத்தது

அண்ணன் தம்பியர் நால்வரும் ஆக,
அன்னையர் மடியினில், அரசன் தோளில்,
கண்ணின் மணிஎன நண்ணி வளர்ந்தார்;
கல்வியும் ஏனைய கலையும் உணர்ந்தார்.

தேரும் குதிரையும் யானையும் ஊர்ந்தார்;
தீமையை வெல்லும் போர்முறை தேர்ந்தார்;
வீரம் புரியும் வில்லொடு நின்றார்;
மேலோர் அருளிய மெய்யுரை கேட்டார்;

மன்னன் தசரதன் மனது நிறைந்தான்;
மைந்தரின் உயிரே தன்உயிர் ஆனான்;
பொன்னின் மாமுடி மின்ன நிமிர்ந்தான்;
பொங்கிய வெண்குடை நீழல் இருந்தான்.

## முனிவன் வருகை

இந்திர நகரம் என்று சிறந்த
இன்பம் பெருகும் அயோத்தியில் ஒருநாள்,
வந்தனன் விசுவா மித்திர முனிவன்,
மாதவர் தம்முள் மாபுலி ஆனான்!

விண்ணவர் தமையும் எள்ளி நகைப்பான் ;
வெஞ்சினம் உறையும் நெஞ்சு படைத்தான் ;
துண்ணென வந்து தோன்றினன்! உடனே
தொழுது பணிந்தான் சுடர்மணி வேந்தன்.

“மன்னு வாழ்க,” எனவா யார
வாழ்த்தி, அமர்ந்தான் மாமறை முனிவன்.
“இன்னு எம்மைத் தாக்கிய வேளை
எய்தும் நற்புகல் நீயே,” என்ருன்.

## ராமனைக் கேட்டல்

“காட்டில் யாகம் செய்ய முனைந்தேன் ;
கள்ள அரக்கர் தடைபுரி கின்ருர் ;
மூட்டும் வேள்வித் தீயினைக் காக்க,
மூத்த மகனை அனுப்புக,” என்ருன்.

அழலின் நடுவே சிறுபுழு வாக
அரசன் ஆருயிர் உருகி அழிந்தான் ;
விழிஇல் லாதான் விழியிணை பெற்று
மீண்டும் இழந்தான், என்ன மெலிந்தான் !

## தசரதன் மறுமொழி

“அறியாத சிறுபிள்ளை, ராமன்,” என்ருன் ;
“அமர்புரிய வில்லெடுக்கும் திறமும் இல்லான் ;
மறையாத அரக்கர்பகை மறைய, நானே
வருகின்றேன்; விடைதருக,” என்ருன் மன்னன்.

என்றவுடன், கௌசிகனும் சீற்றம் பொங்கி
இருவிழியும் தீஉமிழ எழுந்து நின்ருன்!
குன்றனைய காவலனும் நடுக்கம் கொண்டான்;
குறிப்பறிந்து குலகுருவாம் வசிஷ்டன் வந்தான்.

"மன்னவனே, என்னமொழி உரைத்தாய், நீயும்
வர நின்ற பெருவாழ்வை மறுக்கப் போமோ?
சின்னவனே, நின்மைந்தன்?" என்ருன்; என்னச்
சிந்தையிலே தசரதனும் தெளிவு கண்டான்.

## மைந்தரை அனுப்புதல்

வருக,என ராகவனை அழைத்தான் மன்னன்;
வாஞ்சைமிக லக்ஷ்மணனும் இணைந்து வந்தான்;
இருவரையும் முனிவன்எதிர் நிறுத்தி, வேந்தன்,
"இனிஇவர்க்குத் தந்தைதாய் நீயே," என்ருன்.

தீதகன்ற கௌசிகனும் கோபம் நீங்கிச்
சிந்தித்த தவம்இயற்ற எழுந்து போனன்;
மாதவனை நிழல்போலத் தொடர்ந்தார் மைந்தர்,
மாநிலமும் பெருவில்லும் தாங்கும் தோளார்.



## முதல் போர்

மதிலைக் கடந்து, வயல்கடந்து,
மன்னும் சரயு நதிகடந்து,
விதியைக் கடந்த முனிவனுடன்
வேந்தன் புதல்வர் நடந்தனரே.

அரனர் விரும்பி நோன்பிருந்த
அங்க நாட்டுப் பூம்பொழிலில்,
ஒருநாள் தங்கித் துறவியரின்
உள்ளம் குளிர விருந்துண்டார்.

### அனல் காற்று

போனர் ; போன வழிநடுவில்,
பொல்லாப் பாலை நிலம்கண்டார் ;
தேனைய் உலவும் சிறுகாற்றும்
தீயாய் உருவம் திரிந்ததுவே !

முனிவன் நின்றான் ; மலர்அனைய
முத்துச் சிறுவர் முகம்பார்த்தான் ;
அனலும் நீர்போல் இதம்ஆக
அருமை மந்திரம் அறிவித்தான்.

## பாலையின் கதை

மந்திர முனிவன் மைந்தரை நோக்கிப்
பாலை பிறந்த பான்மையும் சொன்னான் ;
“மன்னுயிர் நோக இன்னல் புரிந்த
தீய அரக்கர் தீச்செயல்,” என்றான்.
“தாடகை என்பாள் தலைவி அவர்க்கே ;
இடியும் நஞ்சும் வடிவெனக் கொண்டாள் ;
சுந்தனை மணந்து சுகித்தாள்; இரண்டு
மைந்தரை ஈன்று வளர்த்து மகிழ்ந்தாள்.
நிந்தை மிகுந்தவன் சுந்தன், ஒருநாள்
அகஸ்திய வனத்தை அழிக்க முயன்றான்.
அருந்தவன் சீற, அவனும் இறந்தான்.
தாடகை வெகுண்டாள்; தனயரும் எழுந்தார் ;
அன்னையும் மக்களும் அரக்கர் ஆகக்
கொடிய சாபம் கொடுத்தான் முனிவன்.
இலங்கை வேந்தன் இராவணன், பின்னர்
உறவுகொண் டாடி உறுதுணை வந்தான்.
அருள்இல் லாத அரக்கியின் புதல்வர்
சுபாகு மாரீசர் சுழன்று திரிந்தார்.
தருக்கு நிறைந்த தாடகை இந்த
வனத்தை அழித்து வாழ்கிறாள்,” என்றான்.

## தாடகை ஆவேசம்

ஆனகதை ஞானமுனி கூறிஎழும் முன்னே,
அன்புவழி வந்தஇள மைந்தர்எதிர் ஆக,
வான்அதிர, மண்அதிர, வாரிதி ததும்ப,
மாமலை பெயர்ந்ததென, வஞ்சமகள் வந்தாள்.

குதித்தனள் ; மிதித்தனள் ; கொதித்தகனல் ஆனுள் !
கொல்லவெறி கொண்டுதிரி சூலமும் எறிந்தாள்!
மதித்திலன் ; எதிர்த்திலன் ; உதித்தசுடர் வீரன் ;
வந்தஇவள் பெண்ணென மனம்கருதி நின்ருன்.

## கௌசிகன் ஆணை

அறிந்து கௌசிகன் ராமனை நோக்கி,
"அருங்கணை எய்கெ"ன, ஆணை விதித்தான்.
"பிறந்த நல்லுயிர் குடிக்கும் பேயைப்
பெண்ணென நினைத்தாய், பெரும்பிழை," என்ருன்.

அறத்தின் காவலன் வில்லை வளைத்தான் ;
"ஐயோ!" என்று தாடகை வீழ்ந்தாள் ;
திறத்தின் நாயகன் திருப்புகழ் பாடித்
தேவரும் வந்தார் ; பூமழை பெய்தார்.

ஆற்றல் மிகுந்த படைக்கலம் பலவும்
அருளினன் முனிவன் ; அண்ணலும் ஏற்ருன் ;
போற்றி நல்லறம் புன்னகை புரியப்
பூமித் தாயும் பொங்கி மகிழ்ந்தாள்.



## வேள்வி காவல்

பாலை குளிர்ந்து பனிமலர் தூவப்
பச்சைப் புல்லும் திருவடி தழுவ,
நீல வண்ணனும் தம்பியும் போனர்;
நித்திய முனிவரின் நெடுந்துணை ஆனர்.

மன்னன் மாபலி ஆணவம் அழிய
வாமனன் என்றுரு மாறிய திருமால்
முன்னம் வாழ்ந்த பூம்பொழில் சேர்ந்தார்;
முனிவன், மாதவம் புரிய விரைந்தான்.

புண்ணிய வேள்விக் கூடம் அமைத்தான்;
பொழுதும் கௌசிகன் தீயை வளர்த்தான்
கண்ணினைக் காக்கும் நல்லிமை போலக்
காவல் நின்றனர் காவிய மைந்தர்.

## அரக்கர் சீற்றம்

ஆறுநாள் பொறுத்தார்; பின்னர்
அரக்கரும் வந்தார்; விண்ணில்
ஏறினர்; இடியும் அஞ்ச
இரைந்தனர்; அம்பும் எய்தார்.

பெய்தனர் தீயும் நீரும்;
பெருமலை எறிந்தார்; சீறி
வைதனர்; அண்டம் முட்ட
வளைந்தனர்; மாயம் செய்தார்.

## அம்புப் பந்தல்

தம்பியைப் பார்த்தான் ராமன்;
தம்பியும் வானம் பார்த்தான்;
வெம்பகை முடிக்கும் தோளில்
விளங்கிய வில்லும் பார்த்தான்.

வஞ்சகர் குருதி பட்டு
மாசுறும் வேள்வி என்றே,
அஞ்சன வண்ணன் விண்ணில்
அம்பினால் பந்தல் இட்டான்.

அஞ்சினர் முனிவர் வந்தார்;
"அபயம்!"என் றழுது நின்றார்;
வெஞ்சினம் பெருக வாங்கி,
வெற்றிவில் வளைத்தான் வீரன்.

## பாதகர் அழிந்தார்

வில்லதிர்ந்தது; கணைபறந்தது;
மேகமும்கனல் ஆகவே!
கொல்லவந்தவர் குலைநடுங்கினர்;
குமுறிஆருயிர் கருகினார்.

இடிஇடித்தது; புயல்அடித்தது ;
எய்தசெஞ்சரம் உறுமவே
துடிதுடித்தனர் ; கொடியபாதகர்
துண்டுபட்டனர் ; ஓடினர் !

தலைமைநின்ற சுபாகுவின்தலை
சாய்ந்துபூமியில் உருளவே,
நிலைகுலைந்துமா ரீசனும்கரை
நீண்டவாரிதி வீழ்ந்தனன்.

## வானோர் வாழ்த்து

துந்துபி ஆர்த்தது ; மீண்டும், வானோர்
சுந்தர ராமனை வாழ்த்த விரைந்தார் ;
சிந்தின பூமழை செடியும் மரமும் ;
சீரிய துறவியர் தொழுதனர் சூழ்ந்தார்.

முடிந்தது வேள்வி முறைதவ றுமல் ;
முற்றிய இன்பம் கௌசிகன் பெற்றான்.
விடிந்ததும், வீரன், முனிவனை வணங்கி,
"வேறுநற் பணியும் அருளுக," என்றான்.

## இன்னொரு வேள்வி

மாந்தளிர் மேனி மைந்தனை வாழ்த்தி,
மாதவன் புதிய காரியம் சொன்னான்;
"ஏந்தெழில் உலவும் மிதிலையம் பதியில்
இன்னொரு வேள்வி காணுவோம்," என்றான்.

# மிதிலைக் காட்சி

அழகிருந்த நம்பியை,
அருகுநின்ற தம்பியை,
விழிநனைந்த துறவியர்
விடைகொடுத்து வாழ்த்தினர்.

மெய்யுணர்ந்த முனிவனும்,
வில்லுணர்ந்த வீரரும்,
மையிருண்ட காட்டிலே
வழிநடந்து போயினர்.

துயிலும்அந்தி வேளையில்
சோணையாறு சேர்ந்தனர்;
அயல்இருந்த சோலையில்
அன்றுதங்கி ஏகினர்.

கங்கைஎன்ற அமுதினைக்
கருணைமைந்தர் கண்டனர்;
பொங்கிவந்த பூம்புனற்
புகழ்அறிந்து போற்றினர்.

## மிதிலை சேருதல்

நடந்தனர்; பயிரும் நீரும்
நடம்இடும் கழனி தாண்டி
அடைந்தனர், மிதிலை மண்ணின்
அழகெலாம் பருகி நின்றார்.

நின்றவர் நகர வாயில்
நெருங்கினர்; நெருங்கும் நேரம்
குன்றிய கருங்கல் ஒன்று
கொடிமதிற் புறத்தே கண்டார்.

## அகலிகை பிழைத்தாள்

புண்ணிய மைந்தன் போன
பொன்னடிப் புழுதி பட்டுப்
பெண்ணென உருவம் மாறிப்
பிழைத்தது சிலையும் ஆங்கே!

நிலவிய சாபம் நீங்கி
அகலிகை எழுந்து நின்றாள்.
குலமகள் சுமந்த குற்றம்
கோசிகன் எடுத்துச் சொன்னான்.

ஆருயிர் அளித்த செல்வன்,
“அன்னை நீ செல்க,” என்றான்.
காரிகை தொழுது நீங்கக்
களித்தனன் முனிவர் கோமான்.

தாடகை வீழ்ந்த அந்நாள்
தனயன்கை அழகு கண்டான்;
மேடுபெண் ஆன இந்நாள்
விமலன்கால் அழகும் கண்டான்

## நகர வீதியில்

பலகலையும் நவமணியும்
பயிலும்இன்ப நகரம்;
பழமறையும் அருள்நெறியும்
பரவும்அன்பு நகரம்;
தலைநிமிர்ந்து கொடிஅசையும்
மாமதிலைத் தெருவில்
தவம்உயர்ந்த கௌசிகனும்
இளையவரும் போனார்.

மின்னரசி எனச்சீதை
கன்னிமனை நின்றாள்;
மேல்மாடம் விழிஉயர்த்தி
ராகவனும் கண்டான்;
உன்னியநன் நினைவெல்லாம்
ஒளிஅமுதம் பாய
ஒருவர்மனம் மற்றொருவர்
குடிபுகுந்து கொண்டார்

# ஜனகன் வரவேற்பு

பொன்மாலை தோள்புரள
ஜனகன்எதிர் வந்தான் ;
புதல்வரையும் முனிவனையும்
போற்றிவர வேற்ருன் ;
நன்மாடம் இனிதிருந்தார்
இரவுகழிந் தேகி,
நாள்புலர, மூவருமாய்க்
கொலுமன்றம் சேர்ந்தார்.

வீற்றிருந்த இளங்குமரர்
அழகுமுகம் பருகி,
மெய்சிலிர்த்து வேந்தர்பிரான்
உறவுமுறை கேட்டான் ;
ஏற்றிருந்த பெருமையெலாம்
கௌசிகனும் கூறி,
"எழில்வீரர் சிவன்வில்லும்
காண்பர்இனி," என்ருன்.



# சீதை திருமணம்

ஆவல்பொங்கி, ஜனகமன்னன்
ஆணை போக்கினன்.
ஏவல்கொண்டு, நால்வர்வில்லின்
இல்லம் ஓடினர்.

எண்ணிறந்த மல்லர்தோளில்
வில்லை ஏற்றினர்;
மண்ணிறங்க அடிபெயர்த்து
மன்றம் எய்தினர்.

## சதானந்தன் உரை

குன்றனைய மல்லர்
கொணர்ந்த சிலைகண்டு,
நின்றிருந்த மாந்தர்
நெடுமூச்சு விட்டார்கள்.

ஜனகன் கொலுவில்
தனித்த புகழ்கொண்ட
புனிதன், அகலிகையின்
புதல்வன், சதானந்தன்—

வில்லின் வரலாற்றை
வேந்தன் நிபந்தனையைச்
சொல்ல எழுந்தான்;
சுவைபெருகக் கேட்டார்கள்.

## வில்லின் வரலாறு

"முன்னொருநாள் கொடியதவம் புரிந்த தட்சன்,
முழுமுதல்வி உமையவளை இழிவு செய்தான்;
மின்னொளிரும் சிவபெருமான் வெகுண்டு நீண்ட
வில்லெடுத்துப் போர்க்கோலம் பூண்டு சென்றான்.

சென்றவுடன், தவம்அழிந்து தட்சன் தேய்ந்தான்;
திரண்டிருந்த தேவர்எலாம் ஒளிந்து கொண்டார்.
வென்றிதரும் பெருவில்லை, இறைவன் அந்நாள்
மிதிலைநகர் வேந்தனுக்கு வழங்கிப் போனான்.

## வேந்தன் நிபந்தனை

அவனுடைய திருக்குலத்தில் ஜனகன் வந்தான்;
அரியதவம் புரியநிலம் உழுத வேளை,
கவினுடைய ஏர்முனையில் குழந்தை ஒன்று
கண்டெடுத்தான்; சீதைஎனப் பெயரும் இட்டான்.

ஏரார்ந்த சீதைபுகழ் கேட்ட வேந்தர்
எழுந்தபடை பின்தொடர, மிதிலை வந்தார்;
சீரார்ந்த ஜனகன்ஒரு வார்த்தை சொன்னான்:
"சிவன்வில்லை வளைப்பவர்க்கே சீதை", என்றான்.

வில்லிருந்த சுமைகண்டார்; வலிமை கண்டார்;
மெய்நடுங்கி வந்தவழி விரைந்தார் மன்னர்.
நெல்லுயர்ந்த வயல்சூழும் மிதிலைச் செல்வி
நிற்கின்ருள் கன்னிஎன இன்னும்," என்ருன்.

## வில் ஒடிந்தது

கேட்ட கௌசிகன் திருமுடி அசைத்தனன்;
கீர்த்தி மைந்தனும் வில்லை நெருங்கினன்;
சூட்டும் மென்மலர் மாலையைப் போலவே
தூக்கி ஞன், ஒரு கையில் எடுத்தனன்!

தூக்கிய வில்லை வளைத்தது காணுர்;
தொட்டு நாண்முனை வைத்ததும் அறியார்;
தாக்கிய இடியென இற்றது கேட்டார்;
தரையில் வில்லின் துண்டுகள் கண்டார்!

## எங்கும் இன்பம்!

நீலமாலை என்றதோழி
சேதிசொல்ல ஓடினுள்;
நின்றசீதை உள்ளம்எங்கும்
இன்பவெள்ளம் ஆயினுள்!
ஓலைசெல்ல, உவகைபொங்கி,
உறவுசூழத் தசரதன்
ஊர்கடந்து, நதிகடந்து,
மிதிலைவந்து சேர்ந்தனன்.

சேர்ந்தமன்னன் வளமைகாண
நகரமக்கள் மேவினர்;
தெருவனைத்தும் அழகுசெய்து
திருமணத்தை நாடினர்;
ஊர்ந்தயானை மீதில்ஏறி
முரசறைந்து கூவினர்;
ஒப்பிலாத தெய்வநாளை
எண்ணிஎண்ணி ஆடினர்!

பொன்னுமாகி மின்னுமாகி
அமுதுமான ஜானகி,
பொழுதலர்ந்த மலருமாகி
எழில்குலுங்க வந்தனள்;
அன்னையர்க்கும் அரசனுக்கும்
அடிபணிந்து போற்றினள்;
அன்புதோய்ந்த பார்வைஒன்று
ராமனுக்கும் நல்கினள்.

## மண விழா

அருணன் உதித்தனன், திருமணம் காண
ஆயிரம் ஆயிரம் மாந்தர் நிறைந்தார்;
பெருகிய சுடர்மணிப் பந்தலின் நீழல்
பெரியோர் கூடினர்; முனிவரும் வந்தார்.

பரதன் ஓட்டிய தேர்மிசை ஏறிப்
பரிமள ராமன் ஊர்வலம் ஆனான் ;
கருதும் பாங்கியர் தொடர நடந்தாள் ;
கமலத் திருவும் மணவறை சேர்ந்தாள்.

மங்கள கீதம் வசிஷ்டன் சொன்னான்;
வானவர் விண்ணில் ஆசி புகன்றார் ;
பொங்கிய நன்னீர் வார்த்தான் ஜனகன்;
புதல்வியை, ராமன் மலர்க்கை ஈந்தான்.

அருமறை ஆர்த்தன ; அலைகடல் ஒலிபோல்
ஆர்த்தன முரசம்; ஆர்த்தனர் மக்கள் ;
திருமண மாலை மார்பில் இலங்கச்
சிறுநகை பூத்தான் சீதா ராமன் !



## வில் விளையாட்டு

கோசல நாட்டுக் குமரனை,
　　கோமள மிதிலைக் குமரியை,
மாசறு வில்லின் செல்வனை,
　　வளரும் கருணைச் செல்வியை,
பூசிய சந்தன அழகனைப்
　　புனையும் குங்கும அழகியை,
ஆசையின் அரசரும் மக்களும்
　　அருமறை முனிவரும் கண்டனர்.

அருமறை ஆர்த்தது மீளவும்;
　　ஆசி உரைத்தனர் மாதவர்;
திருமகன் தம்பியர் மூவரும்
　　சீதையின் தங்கையர் மூவரும்
மருவிய திருமணம் கூடினர்;
　　மாண்புறும் இல்லறம் மேவினர்.
அரண்மனை தங்கினர் நாள்சில,
　　அனைவரும் இன்பம் பொங்கினர்.

## பிரிவுத் துன்பம்

அனைவரும் வரிசை கூடி,
　　அடிமலர் தொழுது நிற்கக்
கனியுதிர் சோலை தாண்டிக்
　　கௌசிகன் இமயம் போனான்.

தசரதன் பயணம் என்ருன் ;
ஜனகனும் ஒழுங்கு செய்தான் ;
திசைதொறும் முரசு விம்மச்
சென்றது தேரின் கூட்டம்.

ஜானகி பிரியும் நேரம்,
தம்முயிர் பிரிவதே போல்,
வானுயர் மிதிலே மாந்தர்
வாடினர் ; தேம்பி நின்ருர்.

காவலன் முன்னே செல்லக்
காளேயர் நடுவே செல்லத்
தூவிய அன்பு சேரத்
தொடர்ந்தது ஜனகன் உள்ளம்.

இன்பமும் எழிலும் தோய
யாவரும் ஏகும் வேளே,
வன்பகை யமனே போல
வந்தனன் பரசு ராமன்.

## பரசுராமன் தோற்றம்

போகும்வழி வேகும்படி
மோதும்புயல் ஆனன்;
புகைமண்டலம் உயரும்படி
அனல்கக்கிய் விழியான் ;
சாகும்படி, நிலமன்னவர்
குலம்ஆயிரம் அழியத்
தலேசீவிய மழுவேந்திய
தோளான்இணே இல்லான்.

பொன்னின்மலை போன்ருன்; ஒளி
மின்னும்சடை முடியான்;
போரிற்பகை கொல்லும்பெரு
வில்லும்கரம் உடையான்;
மன்னும்தரை அதிரத் தச-
ரதனும்மனம் அதிர,
வந்தான்இடி எனவே ரகு-
ராமன்எதிர் நின்ருன்!

## தசரதன் பதற்றம்

பரசு ராமனைக் கண்டதும்
பதறி வந்தனன் தசரதன்;
கருணை செய்கென வேண்டினுன்;
காலில் வீழ்ந்தனன்; கெஞ்சினுன்.

"ஐய, என்மகன் இளையவன்,
அமரில் உன்இணை ஆவனே?
வெய்ய வெஞ்சினம் விடுகெ"ன,
வேந்தன் இருகரம் கூப்பினுன்.

## முனிவன் ஏசுதல்

முனிவன் சீறினுன்; ராமனை
முந்தி ஏசினுன்; "மிதிலையில்
குனியும் ஊனவில் ஒடியவே
கொற்றம் எய்தினை", என்றனன்.

"ஒடித்த ஓசையைக் கேட்டதும்
ஓடி வந்தனன்; இன்றுநான்
எடுத்த விஷ்ணுவின் வில்லையும்
எய்து காட்டுக," என்றனன்.

வீரன் வில்லினை வாங்கினான்;
மெல்ல முறுவலும் மேவினான்;
சேர நாண்முனை பூட்டினான்;
செல்லும் அம்பையும் ஏற்றினான்.

## குறிவைத்த வில்

"குறிவைத்த வில்லுக்கு
வழிசொல்க," என்றான்,
குறையாத வீரத்தின்
உருவான மைந்தன்.
மறைகற்றும் அருளின்றி
மழுவுற்ற முனிவன்,
மதிபெற்று, ஜயராமன்
இசைபாடி நின்றான்.

"அரிதாக நான்செய்த
தவமேன்மை எல்லாம்
அம்புக்கு முறையாக
இரைகொள்க," என்றான்;

பரிவாக விடைபெற்று
மலைநாடு போனான்,
பழிநின்ற நெஞ்சத்தில்
ஒளிகண்ட முனிவன்.

வானெங்கும் இடையின்றி
மலர்மாரி பொழிய,
மாமன்னன் எதிர்வந்து
மகன்உச்சி முகர,
ஆனந்த வெள்ளத்தில்
படைவீரர் உயர,
அனைவோரும் இனிதாக
அயோத்திநகர் சேர்ந்தார்.



# கூனி தோன்றினாள்!

நாட்டின் கண்ணென ராமன் இருந்தான்;
நாளும் கோசல மக்கள் மகிழ்ந்தார்.
பாட்டன் அழைத்தான், நல்லுற வாடப்
பரதன் கேகய நகரம் சென்றான்.

அரசன் முதுமைப் பருவம் உணர்ந்தான்,
அரியணை அமரும் ஆசை துறந்தான்;
மருவும் மாமுடி மைந்தன் புனைய,
மன்னன் மாதவம் புரிய நினைந்தான்.

ஆயிரம் ஆண்டுகள் செங்கோல் ஏந்தி,
அருளும் பொருளும் பெருக உயர்ந்தான்;
தாயென மன்னுயிர் தாங்கிய மன்னன்
தானும் நற்கதி தேட விழைந்தான்.

ஆன்றோர் கூடினர், கொலுவில் அமர்ந்தார்;
அரசன் கூறிய பொன்னுரை கேட்டார்.
“ஈன்றாய், தெய்வப் புதல்வனை, ஐயா!
இதுவே தருமம், கடமையும்,” என்றார்.

## ராமனுக்கு மகுடம்

தேரேறிச் சுமந்திரனும் அமைச்சன் சென்ருன்;
“ ஸ்ரீராமா ! கொலுவுக்கு வருக,” என்ருன்.
ஊராரும் வழிநெடுக நின்ருர், நின்ருர்,
ஒப்பில்லா நாயகனை உவந்து கண்டார்.

வந்துமலர் அடிபணிந்த மைந்தன் தன்னை
மனம்நெகிழ மன்னவனும் தழுவிக்கொண்டான்.
“ அந்தமிலாக் கோசலத்தின் மகுடம் சூடி,
அரியணையில் அறம்காப்பாய் இனிநீ,” என்ருன்.

கரியபிரான், கடமைஎன ஏற்ருன் ; தந்தை
கட்டளையும் அதுவென்ருல் மறுசொல் உண்டோ ?
திருவயிறு புளகமுறத் தாயும் கேட்டாள் ;
திருமாலின் அருள்பரவக் கோவில் சென்ருள்.

நாள்குறித்தார்; ராமனுக்கு நன்னீர் ஆட்டி,
நல்லறமும் பெருநெறியும் வசிஷ்டன் சொன்னன்.
தோள்பருத்த வள்ளுவரும் முரசு சாற்றித்
தூங்காத நகரமெலாம் தூண்டிப் போனர்.

## அயோத்தி பூண்ட அழகு

எங்கும் முத்துப் புன்னகையாம்;
எங்கும் இன்பப் பெருநிலவாம்;
சங்கும், யாழும், மத்தளமும்,
சதிரும், பொங்கி எழுந்தனவே.

மணியும், பொன்னும், மரகதமும்,
மலரும், இலையும், தோரணமாம்;
இணையும் வாழை பூங்கமுகும்
இல்லம் தோறும் கொடிமரமாம்.

இருளின் நிழலே படியாமல்,
எரியும் விளக்கு வரிசைகளாம்;
அருளின் செல்வன் பெயர்சொல்லி,
அயோத்தி அழகு பூண்டதுவே!

## பழிகொண்ட கூனி

மண்டலமும் வானகமும்
மகிழும் வேளை,
மனம்கொதித்தாள், பழிவாங்கக்
கூனி வந்தாள்.
பண்டொருநாள், ராமன்வில்
எறிந்த உண்டை
பட்டஅடி மறவாமல்,
வஞ்சம் கொண்டாள்.

சிறுகுழந்தை விளையாட்டை
வினையாய்க் கொண்ட
தீயவளும், கைகேயி
வீடு சேர்ந்தாள்.

அறிகளனத் துயில்எழுப்பி
விவரம் சொன்னாள் ;
“அடுத்தநாள் முடிபுனேவான்
ராமன்,” என்றாள்.

என்றவுடன், கைகேயி
இன்பம் ஓங்கி,
இணையில்லா மணிமாலை
பரிசு தந்தாள்.
நின்றஇடம் குழியாக
எறிந்தாள், கூனி !
“நேர்ந்தவினை நீஉணராய்,
பேதை,” என்றாள்.

## பொல்லாத சூழ்ச்சி

“மன்னவன் ராமன் என்றால்,
கோசலை வாழ்வு கொள்வாள் ;
மற்றுநீ, பரத னோடும்
மாண்பிலா அடிமை அன்றோ?
உன்னிய செல்வம் வந்தால்,
உற்றவர் பகைவர் ஆவார் ;
உரிமையும் பொருளும் இன்றிக்
குன்றுவாய்,” என்றாள் கூனி.

வெம்பிய கூனி, மீண்டும்,
பாம்பென நஞ்சு கக்கி,
மெல்லநல் அரசி நெஞ்சும்
மாற்றினாள் ; சூழ்ச்சி சொன்னாள்.

"சம்பரன் போரில் நீயும்
சாரதி ஆன அன்று,
தசரதன் வரங்கள் தந்தான் ;
இன்றுநீ பெறுக," என்ருள்.

" ஒருவரம், பதினுன் காண்டு
ராகவன் காடு செல்ல ;
ஒருவரம், உன்றன் மைந்தன்
பரதனே பூமி ஆளக்
கருதிநீ கேட்பாய்," என்ருள் ;
நன்றென அரசி சொன்னுள்.
காவலன் வருகை எண்ணிக்
கூனியும் பிரிந்து போனுள்.



# திரியுரை கொண்ட தனயன்

கூனி போனதும், கைகேயி
        கொடிய நாடகம் ஆடினளே;
மேனி மாசுற, மண்மீதில்
        வீழ்ந்தாள், வஞ்சனை கூடினளே.

கட்டிய மேகலை, கைவளையல்,
        காலில் கிண்கிணி, மென்மலரும்,
எட்ட எறிந்தனள்; நெற்றியிலே
        எழுதிய திலகம் அழித்தனளே.

மையும் அழித்தாள்; நறுநெய்யின்
        வாசம் தோய்ந்த கூந்தலையும்
நைய விரித்தாள்; பொய்அழுகை
        நயனம் பொங்கி வழிந்ததுவே.

வந்தான் அரசன், நள்ளிரவில்
        மங்கை கிடந்த நிலைகண்டான்;
"அந்தோ," என்றான்; மெய்பதறி
        "அன்பே, என்னைப் பார்," என்றான்.

## கொல்லும் வரங்கள்

காதகம் நினைத்த காரிகை அருகில்,
ஆதர வாக அமர்ந்தான் அரசன்.
" நிகழ்ந்தது சொல்லுக; நின்னை இகழ்ந்த
பாதகர் உயிரைப் பருகுவேன்," என்றான்.
தேவியும் தருணம் தெரிந்து, மெல்லக்
" காவல, என்மேற் கருணை இருந்தால்,
சம்பரன் போரில் சாற்றிய இரண்டு
வரங்களும் இன்று வழங்குக," என்றாள்.
என்றதும், மன்னன் எழுந்து சிரித்தான் ;
" இன்னல் விடுக, இதற்கோ அழுகை ?
என்மகன் ராமன், என்உயிர் ஆன
நன்மகன் ஆணை ! நல்கினேன், " என்றான்.
வெம்பிய புற்றின் வெளியே பாயும்
நச்சுப் பாம்பென, நங்கையின் நாவில்
கொல்லும் கொடுமை குமுறி எழுந்தது ;
" இளையவன் பரதன் இருநிலம் ஆள;
மூத்தவன் ராமன், முனிவர் தம்முடன்
பதினான் காண்டு பயிலுக காட்டில்,"
என்றனள் அரசி ; இடிந்தான் மன்னன் ;
அழுதான், தொழுதான், ஆவி துடித்தான்,
தரையில் புரண்டான் ; தசரதன், ஐயோ ,
கொடியவள் முன்னே குறையும் இரந்தான்.

## அரசன் முறையீடு

“மண்ணே தருவேன் ; விண்ணே தருவேன் ;
மைந்தன் பிரிவைக் கேளாதே.
கண்ணே தருவேன் ; உயிரே தருவேன் ;
காட்டை மட்டும் நினையாதே.

பெண்ணே, கேகயன் மகளே, பொன்னே,
பேயென நெஞ்சம் மாருதே.
பண்ணே, தேனே, பழகிய அமுதே,
பழியாய் என்னைக் கொல்லாதே,”

என்றே அரசன் ஏங்கி நலிந்தான் ;
இளநகை கொண்டாள் கைகேயி,
“குன்ரு மன்ன, இதுவோ நீயும்
கொடுத்த சொல்லின் கதி?” என்ருள்.

பூந்தார் அணியும் வேந்தன், இரண்டு
புறமும் தீயில் புழுஆனன் ;
“ஈந்தேன் வரமும், ஈந்தேன் உயிரும்,”
என்ருன் ; மண்ணில் சாய்ந்தானே.

## சபையோர் வியப்பு

பொழுது புலர்ந்தது ; மணிமுடி சூட்டும்
புதுமையைக் காண, நெருங்கினர் மாந்தர்.
விழுமிய மங்கலப் பொருள்பல கொண்டான்,
வேதம் முழங்க, வசிஷ்டனும் வந்தான்.

மன்னன் வந்திலன் ; வியந்தனர் சபையோர் ;
மாளிகை தேடிச் சுமந்திரன் சென்றான்.
முன்னம் கேகயன் தனயை அழைத்தாள் ;
“ முந்துக, ராமனைக் கொணருக,” என்றாள்.

## ராமன் வருகை

பொன்மணித் தேரில் மைந்தனும் ஏறிப்
புன்னகை தவழத் திருமனை வந்தான்.
தன்நிகர் இல்லான், நிலம்பட வீழ்ந்து
தாயின் சேவடி தலையில் அணிந்தான்.

இரும்பென இதயம் இறுகிய அரசி,
ஏந்திய வில்லின் செல்வனைக் கண்டாள் ;
“விரும்பி,மன் னவனும் கட்டளை ஒன்று
விதித்தான் ; நீயும் கேட்பாய்,” என்றாள்.

## கைகேயி கட்டளை

“ தந்தையே ஆணை கூறத்
தாயும்நீ சொல்லப் போந்தாய் ;
உய்ந்தனன்,” என்றான் ராமன்.
உவந்தனள், கொடுமை சூழ்ந்தாள்.

“ அரியணை பரதன் ஏறி,
அவனியை அரசு கொள்வான் ;
மருவிநீ, பதினான் காண்டு
மலர்வனம் உறைவாய்,” என்றாள்.

"அன்னை நின் வார்த்தை வேறு,
மன்னவன் ஆணை வேறோ?
பின்னவன் பெருமை, என்றன்
பெருமையே," என்றான் ராமன்.

தாயுரை கொண்டு, தந்தை
தாளிணை மனத்தில் போற்றிப்
போயினன்; விடையும் பெற்றான்;
புதுமலர்ப் பொலிவு பூத்தான்!



# தேர் திரும்பியது

அரியணையும் பொன்முடியும்
துறந்து வந்த
அருமைமகன், கோசலையின்
இல்லம் சேர்ந்தான்;
கரியவனம் புகவாய்த்த
பேறு சொல்லிக்
கைதொழுதான்; இடியுண்டு
வீழ்ந்தாள், அன்னை.

ஒளிவிரிந்த திருமுகத்தைக்
கூர்ந்து பார்த்தாள்;
“உண்மையோ? காவலனே
உரைத்தான்?” என்றாள்.
களிததும்ப, ஈன்றவளின்
உள்ளம் தேறக்
கடமைஎனும் பெருநெறியைச்
சொன்னான் மைந்தன்.

பெண்மணியும் உண்மைநிலை
அறிய எண்ணிப்
பின்னவளாம் கைகேயி
வீடு சென்றாள்;

மண்ணிருந்த வெறும்தரையில்
மயங்கிச் சோர்ந்த
மன்னவனைக் கண்ணுற்றுள்,
சிதைந்து சாய்ந்தாள்.

## கொடிய சேதி

பேரரசி, மாங்கல்யப்
பிச்சை கேட்டாள் ;
பேயான இளையாளின்
காலில் வீழ்ந்தாள்.
ஆருயிரைப் பருகவரும்
அனலைப் போல,
அயோத்திஎலாம் பரவிற்றே
கொடிய சேதி!

## அழுகை வெள்ளம்

ஆவும் கன்றும் அழுதனவே;
அணிலும் சிட்டும் அழுதனவே ;
பூவும் இலையும் அழுதனவே;
பொல்லா முள்ளும் அழுததுவே.

மண்ணும் கல்லும் அழுதனவே ;
மடுவும் நதியும் அழுதனவே ;
விண்ணும் வெளியும் அழுதனவே ;
மின்னும் இடியும் அழுதனவே.

சங்கும் முரசும் அழுதனவே;
   சதிரும் இசையும் அழுதனவே;
எங்கும் கண்ணீர் அலைமோத,
   இருளும் ஒளியும் அழுதனவே.

உலையும் சோறும் அழுதனவே;
   உண்ணும் கிண்ணம் அழுததுவே;
கொலுவில் நின்ற அரியணையும்
   குடையும் குலுங்கி அழுதனவே.

பெண்ணும் ஆணும் அழுதனரே;
   பிறந்த மகவும் அழுததுவே;
எண்ணம் முதிர்ந்த துறவியரும்,
   இதயம் விம்மி அழுதனரே.

## லக்ஷ்மணன் சீற்றம்

சேதிகேட்டதும், புயலெனச்
   சீறி,லக்ஷ்மணன் பதறினான்;
"மாதுசெய்தமா பாதகம்
   மாற்றுவேன்,"எனக் குமுறினான்.

கைபுடைத்தனன், இடியெனக்
காலமிதித்தனன் இளையவன்;
மெய்பதைத்தனன், "பகைவரை
வீழ்த்துவேன்,"எனத் தாவினன்.

கண்சிவந்தனன், மின்னெனக்
கணைஎடுத்தனன், பூட்டினன்;
"அண்ணன்ராமனே கோசலம்
ஆளநல்குவேன்," என்றனன்.

## அண்ணன் அறிவுரை

வில்லெழும் ஒலியைக் கேட்டு,
விரைந்தனன், கரிய செம்மல்;
"அல்லன நினைத்தாய், தம்பி,
ஆறுக சீற்றம்," என்றான்.

"நல்லவன் தந்தை, நம்மை
நாள்தொறும் வளர்த்த கோமான்,
சொல்லினைக் கடந்து செல்லத்
துணிந்தனை, அறமோ?" என்றான்.

அஞ்சன மேகம் என்ன
அண்ணலே வந்த பின்னர்,
வெஞ்சினக் கொடுமை ஏது?
வெம்மையும் தீயும் உண்டோ?

## துவக் கோலம்

தமையனைத் தொடர்ந்து தம்பி,
"தளிர்வனம் புகுவேன்," என்றான்;
அமைவுறச் சீதை என்னும்
அமுதமும், "வருவேன்," என்றாள்.

துடித்தனன் வசிஷ்டன்; அன்னை
சுமித்திரை வெடித்தாள் நெஞ்சம்;
வடித்தனர் சுற்றத் தாரும்
வாரிதி நிறைந்த கண்ணீர்.

மாநகர் புலம்பும் வேளை,
மகிழ்ந்தனர் இருவர்; அந்தக்
கூனியும், அவள்சொல் கேட்ட
கொடியளும், இன்பம் கொண்டார்.

மரவுரி மாற்றுள் தந்தாள்;
மைந்தனும் விரும்பி ஏற்றுன்.
வரிசிலைத் தம்பி பூண்டான்;
மங்கையும் அணிந்து வந்தாள்.

## நகர் நீங்குதல்

மூவரும் தேர்மிசை ஏறினர்;
முனிவனைத் தந்தையைப் போற்றினர்.
தேவியர், அன்னையர் கூடினர்;
திருவருள் வேண்டினர், தேம்பினர்.

அமைந்திலர், மாந்தரும் ஏங்கினர்;
அழகனைத் தொடர்ந்தனர், ஓடினர்.
சுமந்திரன் குதிரையைத் தூண்டினன்;
சூழ்ந்தது காரிருள், வழியிலே.

அனைவரும் சோலையை நாடினர்;
அயர்ந்தனர்; தூங்கினர்; இரவிலே
தனயனும் அமைச்சனை அழைத்தனன்;
"தனிநகர் திரும்புக," என்றனன்.

## வெறும் தேர்

உறங்கிய மக்கள் உணர்வதன் முன்னர்,
பூம்பொழில் நீங்கிப் போனுன், ராமன்.
தம்பியும், தாமரைத் தையலும் தொடரக்
கானகம் நோக்கினுன் கருமுகில் வண்ணன்.
சுமந்திரன், ஆருத் துயரம் சுமந்து,
வெறும்தேர் ஏறி, மெல்ல நகர்ந்தான்.



# உடன் பிறவா உத்தமன்

படர்ந்தநள் ளிரவில்,
மரகத வெயிலும்
பசும்பொன் நிலவும்
நடந்தன போல,
நடந்தனன் ராமன்;
நடந்தனள் சீதை;
நடந்தனன் ஆருயிர்த்
தம்பிலக்ஷ் மணனே.

புலர்ந்ததும், சொந்தக்
கோசல நாட்டின்
பொழிலும் வயலும்
பார்த்து வியந்தார்;
அலர்ந்தமென் மலரும்,
ஆலைக் கரும்பும்,
ஆவும், எருமையும்
வணங்கின நின்றே!

கங்கையின் கரையில்,
அருந்தவ முனிவர்,
கண்ணீ ராட்டிக்
காய்கனி படைத்தார்;

மங்கையும் மைந்தரும்
நெடுவழி நடந்த
வருத்தம் தீர்ந்தார்;
அருந்தி மகிழ்ந்தார்.

## குகன் வருகை

குலமகன் ராமனைக் காணவே,
குகன்எனும் வேடுவன் வந்தனன்;
அலையெழும் கங்கையில், ஆயிரம்
ஆயிரம் தோணிக்கு நாயகன்.

குன்றென உயர்ந்தவன்; கரியவன்;
குறுகிய தோலுடை பூண்டவன்;
வென்றியும் வீரமும் வாய்ந்தவன்;
வில்லிலும் வாளிலும் வல்லவன்.

தேனையும் மீனையும் கொணர்ந்தனன்;
திருவடி தொழுதனன், வைத்தனன்;
"நானும்என் மக்களும், ஐய! நின்
நாய்அடி யோம்,இனி," என்றனன்.

பொன்முடி நீங்கிய வள்ளலின்
பூம்புகழ் இளையவன் கூறினன்;
மின்விழி ஆறெனப் பெருகினன்
வேடுவன், இரவிலும் போயிலன்.

## இளையவன் காவல்

அமைத்தனர், நாணற் பாயல்,
அண்ணலும் அணங்கும் தூங்க;
இமைத்திலன், பெருவில் ஏந்தி,
இளையவன் காவல் நின்ருன்.

தம்பியின் அன்பு பார்த்தான்;
தலைமகன் நேர்மை பார்த்தான்;
அம்பினைப் பூட்டி, வேடன்
அணுகினுன்; அவனும் நின்ருன்!

## வேடன் வேண்டுகோள்

எழுந்ததும், "கங்கை தாண்டி
ஏகுவோம்," என்ருன் ராமன்;
அழுந்திய துயரம் பொங்க
அலைந்தனன், வேடர் கோமான்.

"எம்முடன் வாழ்க, நாளும்
எம்முடன் வளர்க," என்ருன்;
"செம்மையின் தொண்டு செய்வோம்,
திருவருள் புரிக," என்ருன்.

## குறையற்ற செல்வம்

“தேனுண்டு, மீனுண்டு,
தேவர்க்கும் அரிதான
ஊனுண்டு, சுவை கொள்ள;
உறவாட வனம் உண்டு.

குடில்உண்டு, பரண்உண்டு,
குடிநின்ற ஊர்உண்டு,
குடைஉண்டு, கோல்உண்டு,
குறையற்ற நெறிஉண்டு.

வில்லுண்டு, கையுண்டு,
மேலான அருள்உண்டு,
நில்,”என்று முறையிட்டு
நிலவேடன் அழுதானே.

## கங்கையைக் கடத்தல்

ஆறுதல் காட்டி அணைத்தான் ராமன்;
ஊறிய அன்பின் உறுதியும் சொன்னன்.

“அடவியில் சிலநாள் அருந்தவம் இயற்றி,
வடதிசை திரும்பி வருவோம்,” என்ருன்.

நாவாய் வந்தது; நால்வரும் ஏறிப்
பூவார் கங்கைப் புனலைக் கடந்தனர்;

அக்கரை சேர்ந்ததும், அமைதி குலேந்தான்,
பொக்கென வீழ்ந்து புலம்பினன், வேடன்.

“நானும் வருவேன்; நாயக! உனக்குத்
தேனும் கனியும் தேடித் தருவேன்;

ஏவல் செய்ய இருளிலும் செல்வேன்;
காவல் நின்று காப்பேன்,” என்றான்.

## ஐவர் ஆனோர்

அன்னவன் வேட்கை கேட்ட
ஐயனும் உருகிப் போனான்.
“என்னுயிர் ஆனாய், நீயே!”
என்றனன், அருளின் மிக்கான்.

“சீதைநின் கொழுந்தி; இந்த
லக்ஷ்மணன் சிறிய தம்பி;
ஓதிய உலகம் எல்லாம்
உத்தம, உனக்கே சொந்தம்.

அண்ணனும் தம்பி மாரும்
நால்வர்கள், ஐவர் ஆனோம்;
திண்ணிய கடமை எண்ணிச்
செல்லுக, நின்ஊர்,” என்றான்.

“அங்கொரு தம்பி நின்ருன்,
அயோத்தியின் காவல் ஆளுன்;
இங்கொரு தமையன் நீயும்
என்குடி காப்பாய்,” என்ருன்.

என்றனன் அறத்தின் செல்வன்;
இளவலும் மாதும் சூழச்
சென்றனன், கங்கை நீங்கிச்
சித்திர கூடம் கண்டான்.

## கானக வழி

மயில்வந்தது; மான்வந்தது;
மதுரக்குரல் கூவும்
குயில்வந்தது; கிளிவந்தது;
குளிர்கானக வழியில்
முயல்வந்தது; புலிவந்தது;
கரிவந்தது; முதிரா
வெயில்வந்தது; நிழல்வந்தது;
விளையாடினள், சீதை!

அலைபொங்கிய யமுனைப்புனல்
ஆடிக்கரை தாண்டிச்
சிலமைந்தரும் இளமங்கையும்
சென்ருர்சில காதம்;

நிலைதங்கிய நெடுவானிடை
நிமிர்சித்திர கூட
மலைவந்ததும், இலைகொண்டொரு
மனைகட்டினன், இளையோன்.

## உவமை இல்லார்

இரங்கினான்; எம்மான் ராமன்,
இளையவன் பரிவு கண்டான்;
"அருங்கலை இதுபோல் எந்நாள்
அறிந்தனை, தம்பி," என்றான்.

அம்பிலே சிறந்தார்; தூய
அன்பிலும் உவமை இல்லார்;
உம்பரும் புகழ்ந்து போற்ற
உறைந்தனர்; நோன்பு நோற்றார்.

# தம்பியின் துயரம்

அடவியில் இனிதே மூவர்
அறநெறி காக்கும் வேளே,
கொடிமதில் அயோத்தி மாந்தர்
குலேந்தனர்; அமைதி காணுர்.

சுமந்திரன் வெறும்தேர் ஓட்டித்
துயரமே துணையாய் வந்தான்.
அமைந்தஅக் கொடுமை கேட்டுத்
தசரதன் ஆவி நீத்தான்.

கோதையர், அரசன் மார்பில்
கொட்டினுர் குருதிக் கண்ணீர்.
மாதவம் முதிர்ந்த தெய்வ
வசிஷ்டனும் புலம்பிச் சோர்ந்தான்.

"பரதனைக் கொணர்க," என்று
பணித்தனன் முனிவன்; பின்னர்
உருகிய தயிலம் ஊற்றி,
உத்தமன் உடலேக் காத்தான்.

## பரதன் வருகை

ஏழுநாள் பயணம் செய்தான்,
இளையவன் பரதன் வந்தான்;
வாழ்விலாச் சுடலை போலும்
வளநகர் அழிவு கண்டான்.

## வாழ்விலா நகரம்

பூவில்லாதசெடி, நீரில்லாதபயிர்,
புள்ளில்லாதவெறும் வானகம்,
ஆவில்லாதவெளி, வண்டில்லாதபொழில்,
அலையில்லாதநதி, கண்டனன்.

ஏரில்லாதவயல், முரசில்லாதகளம்,
இசையில்லாதமணி மண்டபம்,
தேரில்லாததெரு, கொடியில்லாதமதில்,
தீயில்லாத உலை, கண்டனன்.

## தாயும் தனயனும்

வேதனை தொடர விரைந்தான், பரதன்;
வேந்தன் வாழ்ந்த மாளிகை சேர்ந்தான்.
தாதியை அனுப்பி அழைத்தாள், அன்னை;
தனயனைச் சிந்தை குளிர அணைத்தாள்.

“மைந்த,நின் தந்தை தேவரும் போற்ற
வானகம் சென்று சேர்ந்தனன்,” என்ருள்.
வெந்தனன் பரதன், பேரிடி தாக்கி
வீழ்ந்தனன், கண்ணீர்க் கடலிலே ஆழ்ந்தான்.

அருந்துயர் நோய்க்கு மருந்தென விளங்கும்
அண்ணனைக் காணும் ஏக்கமும் கொண்டான்.
வருந்திய மகனைக் கெஞ்சினுள் அன்னை,
“வாய்த்தநற் பேறு, கேள்,”எனத் தடுத்தாள்.

“மன்னவன் அன்று, சம்பரன் போரில்,
வழங்கிய வரங்கள் வாங்கினேன், இந்நாள்;
முன்னவன் ராமன் முதுவனம் செல்ல,
முழுநிலம் உனக்கே ஆக்கினேன்,” என்ருள்.

துடித்தனன், பரதன்; சூழ்ச்சியை உணர்ந்தான்;
சுற்றிலும் சிவந்த தீஎழ விழித்தான்.
அடித்தனன், கையைப் புடைத்தனன், இடிபோல்
அன்னையை ஒழிப்பேன் என்னவும் ஆர்த்தான்.

## அண்ணன் அருள்முகம்

ஆர்த்தவன் மனத்தில், அஞ்சன வண்ணன்
அருள்முகம் காட்டி அணைந்தனன்; அணையப்
போர்க்குரல் தணிந்து, கோசலைத் தாயின்
பொன்னடி கண்டு வணங்கினுன், பரதன்.

அழுதனன், தொழுதான், விழுமிய புதல்வன்;
அரும்பழி துடைக்கச் சபதமும் ஏற்ருன்.
"வழிவழி வந்த மரபினை மாற்றி
மாநிலம் ஆண்டு வாழ்கிலேன்," என்ருன்.

## தம்பியின் தவக்கோலம்

"வனம்புகுந்த மூத்தவனை
அழைத்து வந்து
மணிமகுடம் அணிவிப்போம்,"
என்ருன் தம்பி.
"இனம்மிகுந்த நாற்படையும்
எழுக, மக்கள்
எழுக,"என முரசறைந்தார்
நகரம் எங்கும்.

அண்ணனைப்போல் மரவுரியே
பரதன் பூண்டான்;
அண்ணனைப்போல் நகர்நீங்கிச்
சோலை சேர்ந்தான்;
அண்ணனைப்போல் புழுதியிலே
அயர்ந்தான் மைந்தன்;
அண்ணனைப்போல் அங்கிருந்து
நடந்தே போனுன்.

வழியெல்லாம் ஸ்ரீராமன்
நாமம் ஒன்றே
வாய்புகலக் கைகுவித்துத்
தலைமேல் வைத்தான்;
அழிவில்லான், நீடூழி
காலம் தோறும்
அறத்துக்கே ஆருயிராய்
அமைந்தான் செல்வன்.



# அரசிருந்த பாதுகை

நெடும்படை சூழ நடந்தனன் பரதன்,
நிதிதரும் கங்கை நதிக்கரை சேர்ந்தான்.
"கொடும்பகை வேந்தர் கூடினர்," என்றே
கொதித்தனன் நெஞ்சம், குகன்எனும் வேடன்.

"வேட்டுவர் படையும் எழுகெ"ன ஆணை
விதித்தனன்; புலிபோல் ஆயிரர் பாய்ந்தார்.
"தீட்டுக கூர்வாள், பூட்டுக பாணம்,
தீயவர் சிதறச் சீறுக," என்றான்.

"அரியணை பறித்தார்; உத்தமன் ராமன்
அருந்தவம் பூண்ட வனத்திலும் தொடர்ந்தார்.
கரைஎழும் கங்கை நதியினைப் பகைவர்
கடப்பரோ? பிழைத்து நடப்பரோ?" என்றான்.

அலையிடை மிதக்கும் தோணிகள் அனைத்தும்
அகற்றுக; இறங்கும் துறையையும் அழிப்பீர்;
வலையிடை மீன்போல் மாற்றலர் துடிக்க
வாட்டுக, வளைத்து நசுக்குக," என்றான்.

"வஞ்சகர் குருதி கங்கையில் பெருக,
மாநில அரசு ராமனே ஆள,
விஞ்சிய பெருமை வேட்டுவர் கொள்ள,
வெட்டுக, குத்தி வீழ்த்துக," என்றான்.

என்றெழுந்த வேடுவனும்,
எதிர்க்கரையில், கைகூப்பி
நின்றிருந்த இளமைந்தன்
நிலைகண்டான்; திடுக்கிட்டான்.

அழுகின்ற திருவிழியும்,
அழுக்கடைந்த பொன்னுடலும்,
எழுகின்ற சடைமுடியும்,
எழில்வேடன் கண்டனனே.

"எம்பெருமான் தம்பியரில்
இவன்பரதன்," எனத்தேர்ந்தான்;
"நம்பியையே போல்கின்றான்,
நாடுவனோ, பிழை?" என்றான்.

தலைவணங்கி நதிகடந்தான்;
தனிப்பரதன் தாள்பணிந்தான்.
"குலமைந்தன் தோழன்," எனக்
கோசலையும் வாழ்த்தினளே.

## புல்லணை

சில்லென்ற கரைஓரம்,
ஸ்ரீராமன் துயில்கொண்ட
புல்லணையைக் கண்டார்கள்;
புரண்டழுதார், எல்லாரும்.

புரண்டழுத துயர்தொடரப்
புறப்பட்டார், படையினரும்
திரண்டெழுந்தார்; தென்திசையில்
சிலகாதம் சென்ருர்கள்.

## லக்ஷ்மணன் பதற்றம்

எழுந்தனன் லக்ஷ்மணன்,
குன்றம் ஏறினன்;
எய்திய நெடும்படை
கண்டு சீறினன்;
மொழிந்தனன் சுடுமொழி,
அண்ணன் கேட்கவே,
"மூண்டது போர்," என
வில்லும் தூக்கினன்.

"நாள்தொறும் விரதமே
காத்து நிற்கிருேம்;
நண்ணிய மணிமுடி
துறந்து வாழ்கிருேம்;
நீள்புவி அனைத்தையும்
ஆளும் ஆசையால்
நெருங்கினன் காட்டிலும்
பரதன்," என்றனன்.

## தனிப்பெரும் கருணை

தம்பியின் அருஞ்சினம்
தவிர்க்க முந்தினான்,
தனிப்பெரும் கருணையே
பயின்ற ராகவன்;
“நம்புக பரதனை,
அறத்தின் மூர்த்தியை
நம்புக, வீண்பழி
விடுக,” என்றனன்.

என்றதும், பரதனே
எதிரில் தோன்றினான்;
இன்னலின் நிலையமாய்
இளைத்த மெய்யினான்;
கன்றிய விழியினன்
கதறி வீழ்ந்தனன்.
கருமுகில் வண்ணனும்
கரைந்து விம்மினான்.

## துயரப் பெருக்கு

தம்பியை எடுத்தனன் தழுவினான்;
சடைமுடி நனையவும் அழுதனன்.
வெம்பிய லக்ஷ்மணன் வெட்கினான்;
வில்லினை மண்மிசை வீசினான்.

அன்னையர் வந்தனர், சீதையை
அணைத்தனர், மைந்தரை வாழ்த்தினர்;
நன்னய அமைச்சனும் முனிவரும்
நாடினர்; மாந்தரும் கூடினர்.

தசரதன் வானகம் சேர்ந்ததும்,
தம்பிநல் அரியணை மறுத்ததும்,
நசிவுற வளநகர் குலைந்ததும்,
நாயகன் செவியுறக் கூறினர்.

உருகினன் தலைமகன்; சீதையும்
உருகினள்; தேவியர் தாங்கினர்.
மருவிய நதிக்கரை ஏகினர்;
மன்னவன் நீர்க்கடன் ஆற்றினர்.

## பரதன் வேண்டுகோள்

அடுத்தநாள், பரதன் கெஞ்சி
அழைத்தனன்; அண்ணன் பாதம்
பிடித்தனன்; "நீயே வந்து
பெருநிலம் ஏற்பாய்," என்றான்.

“அன்னையின் சூது மாற,
அரசமா மரபு வாழ,
என்மன ஏக்கம் தீர,
ஏகுவோம் நகரம்,” என்றான்.

## ராமன் மறுப்பு

மறுத்தனன் பெருமான் ராமன்;
“வாய்மையை மறந்தாய்,” என்றான்.
“பொறுத்திரு பதினான் காண்டு,
புனைந்திரு மகுடம்,” என்றான்.

“தாய்வரம் கொண்டாள்; பெற்ற
தந்தையும் ஆணை சொன்னான்;
ஆயநற் கடமை வேறே
அறிந்திலேன்,” என்றான் ராமன்.

“வையகம் எனக்கே என்னும்
மரபுநீ உரைத்தாய்; அந்த
வையக உரிமை, நானும்
வழங்கினேன் உனக்கே,” என்றான்.

## பாதுகை பெறுதல்

பணிந்தனன் பரதன்; அண்ணன்
  பாதுகை அழுது பெற்ருன்.
அணிந்தனன் தலைமேல் கொண்டான்;
  அனைவரும் தொடரச் சென்ருன்.

நடந்தனன், கங்கை தாண்டி
  நந்தியம் பதியைச் சேர்ந்தான்;
படிந்தபொன் அணையில், அண்ணன்
  பாதுகை தொழுது வைத்தான்.

பாதுகை அரசு செய்யப்
  பரதனும் விரதம் காத்தான்;
தீதற ராமன் சென்ற
  தென்திசை நினைவே பூண்டான்.



## அமைதி காத்த அண்ணல்

அந்தியும் பகலும் விழியிணை நனைய,
அண்ணனை எண்ணிப் பரதனும் உருக,
நந்தியம் பதியில் பாதுகை வளர,
நாயகன் சித்திர கூடம் அகன்ருன்.

நடந்தனன் ராமன்; திருவடி பற்றி
நடந்தது வீரம்; நடந்தது கருணை;
"அடைந்தனம், பிறவிப் பெரும்பயன்," என்றே
அருந்தவப் பெரியோர் வழியெலாம் நின்ருர்.

## அநசூயை அன்பு

அத்திரி முனிவன் உறைந்தநன் மனையில்
அண்ணலும் தங்கி மகிழ்ந்தனன் ஒருநாள்;
சித்திர மிதிலைச் செல்வியை அணைத்துச்
சிந்தை நெகிழ்ந்தாள் சதிஅந சூயை.

சந்தனம் பூசிப் புதுமலர் சூட்டித்
தலைமுடி திருத்தி ஒப்பனை புரிந்தாள்;
சிந்துரம் எழுதி, மணிநகை பூட்டிச்
சீதையை அழகு பார்த்தனள் தேவி.

## விராதன் சண்டை

விடைபெற்று மூவரும் போயினர்;
  விரிகின்ற தண்டகம் மேவினர்.
இடிவெட்டும் எரிமலை போலவே,
  எதிர்வந்து விராதனும் தாவினன்.

சூலத்தை ஓங்கினன், உறுமினன்,
  சுழல்கொண்டு சீதையைத் தூக்கினன்.
காலத்தை வென்றவில் வீரரும்
  கனல்பொங்க அதமனைத் தாக்கினர்.

தலையற்று வஞ்சகன் வீழ்ந்தனன்;
  தாள்வைத்து ராகவன் உந்தினன்;
பொலிவுற்ற பொற்பதம் பட்டதும்
  புதுவாழ்வு பெற்றனன் தீயவன்.

பொல்லாத சாபமே நீங்கினன்;
  புகழ்மிக்க தும்புரு ஆயினன்;
கல்யாண ராமனைப் போற்றினன்;
  கைகூப்பி வானிலே பாடினன்.

"நீயன்றி நெடுவினை தீருமோ?
  நீயன்றி நல்லறம் வாழுமோ?
தாய்என்று பூமியைத் தாங்குவாய்,
  தயைநின்ற மூர்த்திநீ," என்றனன்.

# சரபங்கன் வரவேற்பு

வினைதீர்ந்து தும்புருவும்
 விண்ணுலகம் போய்ச்சேர்ந்தான்;
கனியார்ந்த கானகத்தில்
 காளையரும் போனார்கள்.

சரபங்கன் எதிர்கொண்டான்;
 "ஐயராமா, வருகெ"ன்றான்;
விரதங்கள் பலநோற்று
 மெய்யான பொருள்உணர்ந்தோன்.

"நின்முகத்தைக் காண்பதற்கே
 நெடுங்காலம் காத்திருந்தேன்;
என்மனத்துக் குறைதீர்ந்தேன்;
 இனிவேண்டேன் உடல்," என்றான்.

தீமுழுகி, மனமாரச்
 சிற்றுடலை விட்டொழித்தான்.
மாமுனிவன், எதிரில்லா
 வைகுந்த நிலைஅடைந்தான்.

ஒருதடவை, ராமன்பேர்
 உரைப்பவரும் கதிபெறுவார்;
இருவிழியில் கண்டவனை
 என்சொல்லிப் போற்றுவமே.

## முனிவருக்கு அபயம்

கருணை மைந்தர் பயணம் ஆயினர்;
காடு மேடு பொய்கை தாண்டினர்;
பரிவு பொங்க முனிவர் கூடினர்;
பர்ண சாலை நல்கி வாழ்த்தினர்.

அரக்கர் செய்த கொடுமை கூறினர்;
அபயம் என்று நெஞ்சம் ஏங்கினர்.
இரக்கம் அற்ற பகைவர் குலையவே,
இனிய ராமன் அம்பு பூட்டினன்.

அஞ்சல் என்று தஞ்சம் அருளினன்,
அடவி எங்கும் அமைதி நாட்டினன்;
பஞ்சம் இன்றி அன்பு பெருகவே,
பத்து வருஷம் அங்கு வைகினன்.

## அகத்தியன் ஆசி

அங்கிருந்து ரகுராமன்
நீண்டவனம் தாண்டி,
அருந்தமிழின் பெருந்தலைவன்
அகத்தியனைக் கண்டான்.
பொங்கிவரும் முழுநிலவு
போல,அருள் பொங்கிப்
புகழ்முனிவன், கமலவிழி
நீர்பொழிய நின்றான்.

“ திருமறையும் அறநெறியும்
பெருநிலமும் வாழும் ;
சீர்பெருகும் ; இனிஐயம்
இல்லை,” எனச் சொன்னான்.
“ எரிகுமுற, முப்புரத்தைச்
சுட்டசிவன் வில்லும்
இங்குளது ; நீஅதனை
ஏற்றருள்க,” என்றான்.

நயமுடைய செந்தமிழின்
சுவைகண்ட பெரியோன்,
நாயகனை, ஜானகியை,
இளையவனை வாழ்த்தி,
“ உயர்மரமும் உயர்மலையும்
உயர்நதியும் கூடி
உறவாடும் பஞ்சவடி
சென்றுறைக,” என்றான்.

## ஜடாயு சந்திப்பு

இடைவழியில் ஜடாயுஎனும்
தனிப்பறவை வேந்தன்,
எழில்வீரர் யாவரென
வினவி, மனம் கனிந்தான் ;

“முடிமன்னன் தசரதற்கு
முதல்நண்பன்,” என்ருன்.
மூவருமாய் வலம்வந்து
மலர்ப்பாதம் தொழுதார்.

வானெழுந்து, நிழல்விரித்துக்
கழுகுவழி காட்ட,
வரநதிகோ தாவரியின்
கரைசேர்ந்து நின்ருர் ;
தேனிருந்த பஞ்சவடிப்
பூங்காவும் கண்டார் ;
ஸ்ரீராமன் சீதையொடு
சிறுகுடிலில் வாழ்ந்தான்.



## வஞ்சமகள் வந்தாள்!

பஞ்சவடிப் பூஞ்சோலை
எழில்விரிந்த சமயம்;
பனிமலரும் கனிமரமும்
பயன்அடைந்த தருணம்;
வஞ்சமகள் சூர்ப்பணகை
நஞ்சமென வந்தாள்.
மால்அழகன் ராகவனை
விழிநிறையக் கண்டாள்.

தென்னிலங்கை வேந்தனுக்குப்
பின்பிறந்த தங்கை,
தீவினையும் மந்திரமும்
கைதேர்ந்த மங்கை,
மின்னுலவும் வானவெளி
சென்றிறங்கி வந்தாள்;
மெய்யில்லா இருள்மனமும்
பெருவயிறும் பெற்றாள்.

## உருமாற்றம்

தூயவனைக் கண்டவுடன்,
ஆசைமிக மீறிச்
சுடர்எரியும் பேரழகுக்
கன்னிஎன மாறி,
மாயமுறக் கைகூப்பி,
மலர்அடியும் போற்றி,
"மன்னவ,என் மனம்குளிர
மணம்புரிவாய்," என்ருள்.

## ராமன் மறுமொழி

"வல்லரக்கர் குடிப்பிறந்தும்
அறநெறியே நாடி,
மாமுனிவர் அருள்பேணி
வாழ்கின்றேன்," என்ருள்.
வில்லிருக்கும் குலவீரன்,
ஜானகியைக் காட்டி,
"வேருெருபெண் நினைவறியேன்,
செல்லுகநீ," என்ருன்.

## ஜானகி நின்ற அழகு

ஜானகியும் தென்றல்என
நடைபயின்று வந்தாள்;
ஜயராமன் தோள்இணைந்து
பூங்கொடிபோல் நின்ருள்;
ஈனவிழி தாங்காமல்,
சூர்ப்பணகை பார்த்தாள்;
இரவெல்லாம் தூங்காமல்,
பழிஎண்ணி, நைந்தாள்.

## அரக்கியின் திட்டம்

"சீதையைப் பிரித்தால், அண்ணல்
சிந்தையும் திரிவான்," என்று
காதகி எண்ணம் கொண்டாள்;
கடித்தனள், பல்லும் மென்ருள்.

தேவியைத் தூக்கிச் செல்ல
வகுத்தனள் கொடிய திட்டம்.
பூவளர் பொழிலை நாடிப்
போயினுள்; வேவு பார்த்தாள்.

விடிந்ததும், நதியை நோக்கி
வித்தகன் ராமன் சென்ருன்;
படிந்தனன், புதுநீ ராடிப்
பரிதியைத் தொழுது நின்ருன்.

பன்னக சாலை ஓரம்,
பரவிய மரத்தின் பின்னே
இன்னமும், நெடிய காவல்
இருந்தனன், அருமைத் தம்பி.

ஜானகி தனியே நின்ருள்;
"வாய்த்தது தருணம்," என்று
கானக வேங்கை போலக்
கடுகினுள்; அரக்கி பாய்ந்தாள்.

## வஞ்சகம் குலைந்தது

"நில்லடீ!" என்ருன், தம்பி;
நெருப்பெனத் தாவி வந்தான்.
ஒல்லென உடைவாள் வாங்கி
ஓங்கினுன், புயலும் ஆனுன்.

“ நின்னையும் கவர்வேன்,” என்று
நெருங்கினாள், சூது தேர்ந்தாள்.
மின்னென எழுந்தான், மூண்ட
வெவ்வினை முடித்தான் வீரன்.

அரக்கியின் காதும் மூக்கும்
அறுத்தனன்; கூந்தல் பற்றி
நெருக்கினன்; “ ஐயோ!” என்று
வஞ்சகி நிலத்தில் சாய்ந்தாள்.

## சூர்ப்பணகையின் ஓலம்

“ விண்ணோரும் பணிபுரிய
வீற்றிருக்கும் தென்னிலங்கை
அண்ணாவோ!” எனக்கூவி
அழுதாளாம், சூர்ப்பணகை.

“ சிவன்இருந்த கயிலைமலை
சீர்குலைத்த தோளுடையாய்,
அவம்அடைந்து நடுவனத்தில்
அலைகின்றேன், பாராயோ ?

எண்ணுமல், சிறுமனிதன்,
என்னருமைப் பூவதனம்
புண்ணுகச் செய்தபழி
போக்குதற்கு வாராயோ?

நவமணியும் ஒளிசிதற,
நாயகனுய் நீஅமர்ந்த
அவைநடுவே, முகம்காட்ட
அடியேனும் ஆற்றுவனே?"

## ராமன் அறிவுரை

எனஅழுத கொடியவளின்
எதிர்வந்தான், ரகுராமன்
விளைவு கண்டான்.
"இனிஇருந்தால், இடர்பெருகும்
ஓடிப்போ," எனஇரங்கி,
அறிவும் சொன்னுன்.

சொன்னமொழி கேளாமல்,
சூர்ப்பணகை, எள்ளளவும்
நாணம் இன்றி,
"என்னுயிரே, நின்தம்பி
செய்தபழி தீர,எனை
ஏற்பாய்," என்ருள்.

“அடம்பிடித்த பாதகியை
மாய்ப்பதுவே, அமைதிக்கு
வழியாம்,” என்னக்
கடும்சினத்துச் சிறியபிரான்
கடைக்கண்ணால் அருகிருந்த
வேலைப் பார்த்தான்.

பார்த்தவுடன் மனம்பதைத்தாள்,
பாவிமகள்; “அரைநொடியில்
உம்மைக் கொல்லக்
கூர்த்தபடைக் கூற்றுவனைக்
கொணர்கின்றேன்,” எனச்சபதம்
கூறிச் சென்றாள்.

சொரிகின்ற செங்குருதிச்
சுவடுபட, வழிநடந்தாள்;
சொந்தம் மிக்க
கரன்என்னும் அரக்கர்குலக்
காவலனைப் போய்அடைந்தாள்;
கதறி வீழ்ந்தாள்.



# இலங்கையில் அழுகுரல்

கனல்உமிழ்ந்தனன், கரன்எழுந்தனன் ;
காவல்வீரரும் முரசுகொட்டினர்.
வனம்அதிர்ந்தது ; மலைசரிந்தது ;
வான்இருண்டது ; படைஎழுந்ததே.

கொடிஉயர்த்தினர் ; தேர்செலுத்தினர் ;
குதிரை,நாய்,நரி, யானைஏறினர் ;
இடிமுழக்கினர், அசுரர்எண்ணிலார் ;
எமனும்அஞ்சவே நடைமுடுக்கினர்.

கரியமேனியும், கரியஉள்ளமும்,
கடியநஞ்செனக் கண்ணும்எய்தினர் ;
அரியமேருவைத் திருகும்ஆற்றலார் ;
அமரர்தம்மையும் அடிமைஆக்கினர்.

கல்லும்ஏந்தினர் ; கோலும்ஏந்தினர் ;
காலபாசமும் கட்டிவீசினர் ;
வில்லும்ஏந்தினர் ; வேலும்ஏந்தினர் ;
வெய்யசூலமும் வாளும்ஓங்கினர்.

## வழியெங்கும் நாசம்

ஒடுங்கின பறவைகள் கொடும்படை செல்ல;
ஒடிந்தன மரங்களும் சடசட ஒலிக்க;
நடுங்கின வேங்கையும் கரடியும் பாம்பும்;
நறும்புனல் சுருங்கின வறண்டன நதிகள்.

## ராமன் போர்க்கோலம்

வந்தனர், சோலையை வளைத்தனர் அசுரர்;
வாளொடும் வில்லொடும் எழுந்தனன், ராமன்;
முந்தினன் இளையவன், "பகைவரை நானே
மோதுவேன், கட்டளை அருளுக," என்ருன்.

நில்லெனத் தம்பியை நிறுத்தினுன், அண்ணன்;
"நிலமகள் சீதையைக் காத்திரு," என்ருன்.
புல்லிய பகைஇருள் பொடிபட, வீரப்
பொன்னொளி விரியவே போர்முனை போனுன்.

## அரக்கர்படை அழிதல்

தனிப்பட வந்த தலைமகனைத்
தணல்என அரக்கர் சூழ்ந்தனரே.
நினைப்பதன் முன்னம் நாண்ஏற்றி,
நெடியவன், அம்பு பொழிந்தனனே.

பாய்ந்தன பாணம் பாய்ந்தனவே;
பாதகர் உயிரைப் பருகினவே;
சாய்ந்தன தலைகள் சாய்ந்தனவே;
சாடிய படையும் சிதறியதே.

திரிசிரன் என்னும் தீயவனும்,
சேனை நடத்தும் தூஷணனும்,
கரனும் அழிந்தார்; இரைகொள்ளக்
கழுகும் நரியும் திரண்டனவே.

## வெற்றிவீரன்

ஆர்த்தனர், வானவர் பாடினர்,
ஆடினர், பூமழை தூவினர்.
போர்க்களம் நீங்கிய புண்ணியன்
போயினன், சோலையை நாடினன்.

உருகிய பொன்னென ஜானகி
ஓடினள்; தம்பியும் ஓடினன்;
திருமகன் மேனியில் புழுதியும்,
தீயவர் குருதியும், கண்டனர்.

கண்டனர், திருவிழி நீரினுல்
கழுவினர்; மலர்அடி தழுவினுர்;
அண்டினர், முனிவரர் கூடினுர்,
அண்ணலின் தோள்வலி வாழ்த்தினுர்.

## ராவணன் கொலு

படைஅரக்கர் சாய்ந்தவுடன்,
படுபாவி சூர்ப்பணகை
பாய்ந்து சென்ருள்;
முடிஉயர்ந்த ராவணற்கு
முறைசொல்லிப் பழிதீர்க்க
உறுதி பூண்டாள்.

பொன்உருக்கிச் சுவர்எழுப்பிப்
புதுவயிர மணிஇழைத்துக்
கூரை வேய்ந்து,
மின்இணைத்த மண்டபத்தில்,
வெயில்எரிய வீற்றிருந்தான்
இலங்கை வேந்தன்.

வானவரும் கைகட்டி
வாய்புதைத்துக் குற்றேவல்
வளைந்து செய்ய,
மான்விழியாள் ஊர்வசியே
நடனமிட, வாள்அரசன்
உவகை கொண்டான்.

மத்தளமும், வேய்ங்குழலும்,
யாழும்அலால், வேறுகுரல்
வளரா ஊரில்,
கத்துகடல் எனஅழுகைக்
குரல்எழுப்பிச் சூர்ப்பணகை
கடுகி வந்தாள்.

"யாவர்செயல்?" என,வெகுண்டான்,
எரிகுமுற ராவணனும்
குதித்து நின்ருன்!
மூவுலகும் இருள்சூழச்
செங்கதிரோன் முகம்வேர்க்கக்
காலன் வீழ்ந்தான்!

“பழிசெய்தார் மானிடவர்;
கரனைக் கொன்றார்;
பஞ்சவடி வாழ்கின்றார்
இன்னும்,” என்றாள்.
அழுகின்ற சூர்ப்பணகை,
அசுரன் நெஞ்சில்
அனல்மூள, ஜானகியின்
அழகும் சொன்னாள்.

## அசுரன் சதி

மதிஇழந்தான் இலங்கையர்கோன்;
சீதை என்னும்
மணிவிளக்கை, “வஞ்சனையால்
கொணர்வேன்,” என்றான்.
சதிநினைந்து, தனியாக
விமானம் ஏறித்
தாய்மாமன் மாரீசன்
இருக்கை சேர்ந்தான்.

“மாயப்பொன் மானாக
வடிவம் மாறி,
மலர்மங்கை மனம்கவர
விரைவாய்,” என்றான்.

தீயைப்போய் மிதித்ததுபோல்
முதியோன் அஞ்சி,
ஸ்ரீராமன் வில்வலிமை
சொல்லப் போந்தான்.

வல்அரக்கன் கேட்பானே?
வரம்பு மீறி
வாள்உருவி, மாமன்உயிர்
"மாய்ப்பேன்," என்றான்.
சொல்அடக்கி, மாரீசன்,
பொய்மான் ஆனான்.
தோள்புடைக்க, ராவணனும்
பிரிந்து போனான்.



## மாயப் பொன்மான்

ஆணிப்பொன் மேனியிலே முத்துப் புள்ளி
அணிசெய்ய, விழிமருள, வஞ்சம் பொங்க,
மாணிக்க வெயில்எரியும் இளமான் ஆகி,
மாரீசன் பஞ்சவடி வந்து சேர்ந்தான்.

மலர்பறித்து நின்றிருந்த மிதிலைச் செல்வி,
மனம்மயங்கிப் பொய்மானைப் பிடிக்க எண்ணி.
நலம்உயர்ந்த நாயகனை நாடிச் சென்றாள் ;
நடைபயிலும் குழந்தைஎன விந்தை சொன்னாள்.

## லக்ஷ்மணன் தடுத்தல்

“ வருகின்றேன்,” என,எழுந்தான்
வில்லின் வீரன்.
வழிமறித்தான் இளையபிரான்,
கடமை தேர்ந்தான் ;
“ திரிகின்றார் பகைஅரக்கர் ;
வடிவம் மாறும்
திறம்உடையார் ; மாயவலை
விரித்தார்,” என்றான்.

நில்லாத உலகத்தில்,
உயிர்கள் கோடி
நிலவுகிற அதிசயத்தைத்
தமையன் சொன்னன்;
“இல்லாத உருஇல்லை;
பொன்னின் மானும்
இயல்பேஆம்,” என,விலகி
நடந்தான் முன்னல்.

## தம்பியின் காவல்

ஜானகி மகிழ்ந்தாள், பன்ன
சாலையைச் சார்ந்து நின்ருள்;
கானிடை மீண்டும் காவல்
கட்டினன் கனகத் தம்பி.

தலைவியின் ஆர்வம் கண்டு
நடந்தனன், தருமச் செம்மல்;
நிலையிலா மானின் பின்னே
ஏகினன், நீண்ட தூரம்.

## நடித்தது பொய்மான்

நடித்தது பொய்மான்; மெல்ல
நகர்ந்தது; புல்லைத் தேடிக்
கடித்தது; மருண்டதே போல்
கடந்தது காடும் குன்றும்.

தந்திர விலங்கு செய்த
சதியினை உணர்ந்தான் ராமன்;
சுந்தரத் தடக்கை வாங்கித்
தொடுத்தனன், சிவந்த பாணம்!

துடித்தனன் அசுரன்; சாகும்
துடிப்பிலும் சூது சூழ்ந்தான்;
வெடித்தெழும் குரலில், "தம்பி
லக்ஷ்மணா!" என்று வீழ்ந்தான்.

## சீதையின் தடுமாற்றம்

கூக்குரல் கேட்டாள்,
தீயிலே கருகும்
கொடிஎனப் பதறிக்
குலைந்தனள் சீதை.
"ஆக்கிய கருணை
வள்ளலை, நானே
அனுப்பினேன்," என்று
புலம்பினாள் பேதை.

காவலில் நின்ற
தம்பியைக் கூவிக்
கடிந்தனள்; சிந்தை
நிதானமும் இழந்தாள்;

ஆவியின் தலைவன்
அடைந்தவெந் துயரம்
அறிந்தனை, அறிந்தும்
நகர்ந்திலை," என்றாள்.

புலம்பிய தாயை
லக்ஷ்மணன் தொழுதான்,
"பொய்க்குரல் கேட்டுக்
கலங்கினீர்," என்றான்;
"இலங்கிய பெருமான்
ஆற்றலும், வில்லின்
ஏற்றமும் மறந்து
நடுங்கினீர்," என்றான்.

"வையகம் சாயும்
நாயகன் சாய்ந்தால்,
வானமும் சரிந்து
நிலைகெடும் அன்றோ ?
ஐயமும் துயரும்
அகற்றுவீர்; கணத்தில்
அண்ணலே திரும்பி
நண்ணுவான்," என்றான்.

தணிந்திலள் ; மீண்டும்
ஏசினாள் மங்கை ;
"தணலிலே வீழ்ந்து
மாளுவேன்," என்றாள்.
பணிந்தனன் இளையோன் ;
பழியுரை அஞ்சிப்
பன்னக சாலை
துறந்தனன், போனான்.

## ராவணன் வருகை

இளையவன் ஏகவும்,
அசுரன் ராவணன்
எய்தினான் ; துறவியின்
உருவம் தாங்கினான் ;
தளர்வுற நடந்தனன் ;
மெலிந்த கைகளில்
தண்டமும் ஆமையின்
மணையும் ஏந்தினான்.

வீணையின் இசையென
வேதம் பாடினான் ;
மெல்லிய பூமணி
மாலை சூடினான் ;

ஊணிலன் எனும்படி
உலர்ந்த மேனியான்;
உன்னிய சாலையின்
வாயில் மேவினான்.

## கற்பெனும் கனல்

"சாலையில் உறைபவர் யார்?" எனத்
தனிக்குரல் கூவினன் ராவணன்.
சோலையின் கிளியென, மெல்லவே
தூயவள் சீதையும் தோன்றினாள்.

வந்தனள், தன்விழி நீரினை
மறைத்தனள், துறவியைப் போற்றினாள்;
செந்தளிர்க் கைகளைக் கூப்பினாள்;
திருந்திய ஆசனம் நல்கினாள்.

கண்டனன் ராவணன், அமுதினைக்
கற்பெனும் கனலினைக் கண்டனன்;
அண்டமும் பூமியும் ஒளிதரும்
அதிசய நிலவினை நோக்கினான்.

குலமுறை வினவினன் கொடியவன்.
கோதையும் பணிவுறக் கூறினாள்;
"நிலைபெற நல்லறம் உயரவே,
நெடுநகர் நீங்கினோம்," என்றனள்.

"கரனையும் மாய்த்தவன் நாயகன்;
கணத்தினில் மீளுவன்; ஆண்மையின்
சிரமென உயர்ந்தவன்; அசுரரைத்
தீயெழ எரிப்பவன்," என்றனள்.

## ராவணன் சூது

என்றவள் சொல்லும் போதே
எழுந்தனன், இலங்கை வேந்தன்.
குன்றென உருவம் காட்டிக்
குலக்கொடி நடுங்க நின்றான்.

நடுங்கின மண்ணும் நீரும்!
நடுங்கின காற்றும் தீயும்!
ஒடுங்கின விண்ணும் மீனும்!
ஒடுங்கின உயிர்கள் எங்கும்!

பெயர்த்தனன், நிலத்தைக் கீறிப்
பிராட்டியைக் குடிலி னேடும்
உயர்த்தினன்; தேரில் வைத்தான்;
ஓட்டினன்; இடிபோல் சென்றான்!



# ஜடாயுவின் கடும் போர்

ஆவி குலைந்தாள், ஜானகி வீழ்ந்தாள்;
  ஐயோ! துயரக் கரைகாணுள்;
கூவி எழுந்தாள்; "கோசல ராமா,
  குமரா, இளையோய்," எனவுைந்தாள்.

தீயெழ அதிரும் எரிமலை போலத்
  தேர்மேல் அசுரன் சினம்உற்றுன்.
ஆயிழை நல்லாள் சீதை மயங்கி,
  அரவின் வாயில் கிளிஆனுள்.

"மலையே, மடுவே, மரமே, மலரே,
  மானே, மயிலே, மழைமுகிலே,
தொலையா அருளின் பெருமான் உணரச்
  சொல்வீர், அடியேன் துயர்," என்றுள்.

"அம்மா அபயம்! கோதா வரி! உன்
  அலையைப் பெருக்கித் திசைமாறி,
எம்மான் அருகே விரைவாய், எளியேன்
  இன்னல் உரைப்பாய்," எனஅழுதாள்.

# வழிமறித்த ஜடாயு

சீதையின் அழுகுரல் கேட்ட ஜடாயு
சீறினன்; பெரும்சுழற் காற்றென வந்தான்.
பாதையை மறைத்தனன்; சிறகுகள் விரித்துப்
பாய்ந்தனன்; "நில்லடா, பாதகா !" என்றான்.

தேரிலே கட்டிய வீணையின் கொடியைச்
சிதைத்தனன்; பாகனும் குதிரையும் சாக
வாரினன்; "அன்னையே ஜானகி, வருந்தேல்;
வஞ்சகன் ஆருயிர் வாங்குவேன்," என்றான்.

எடுத்தனன் ராவணன், பாணமும் வேலும்
இடையற எய்தனன்; மழைஎனச் சொரிந்தான்.
அடித்தனன் ஜடாயு, நகங்களும் அலகும்
ஆயுதம் ஆக்கினன்; கொடும்சமர் புரிந்தான்.

குதித்தனன் ராவணன்; சிவனிடம் பெற்ற
கூரிய வாளினால் சிறகுகள் அறுத்தான்.
பதைத்தனன் பறவையில் பெரியவன்; பொங்கிப்
பாய்ந்தசெங் குருதியில் உருண்டனன், அந்தோ !

## அரக்கன் பறந்தான்

தந்தையினும் பரிவுடைய
கழுகு வீழத்
தத்தளித்தாள் வைதேகி
சரிந்து சாய்ந்தாள்.
சுந்தரியைக் குடிலினெடும்
அசுரன் தூக்கித்
தோள்இருத்தி, விண்வழியே
பறந்து சென்ருன்.

தாண்டுகிற வேகத்தில்,
உணர்வு குன்றித்
தளர்ந்தாலும், பெண்ணரசி
கருமம் எண்ணிப்
பூண்டிருந்த நகைஅனைத்தும்
எடுத்துக் கட்டிப்
பொன்விழியின் நீராட்டி,
நிலத்தில் போட்டாள்.

கணப்பொழுதில் ராவணன்போய்
இலங்கை சேர்ந்தான்;
கடியபகை அரக்கியரைக்
காவல் ஆக்கி,

அணிக்கமலத் திருமகளை,
உலகத் தாயை,
அசோகமரச் சோலையிலே
சிறையும் வைத்தான்.

## எதிர்வந்த இளையவன்

மான்உருவில் சதிபுரிந்த
மாரீசன் உயிர்முடித்துக்
கானகத்தில், ஐயராமன்
கவலைமிக வழிநடந்தான்.

வழிநடுவில், இளையபிரான்
மதிவல்லான் எதிர்வந்தான்;
பழிஉரைத்த ஜானகியின்
படுதுயர நிலைசொன்னன்.

"தனியாக இளமங்கை
சாலையிலே சார்ந்திருக்க,
வினைஏது செய்தாரோ
வில்லரக்கர் ?" என,விரைந்தார்.

## அண்ணலின் கலக்கம்

தழை திருந்திய சாலையைக் கண்டிலர் ; பொழிலில்
எழில் அரும்பிய சீதையும் எதிர்வரக் காணர் ;
குழி இருந்ததைக் கண்டனர்; கொதித்தனர்; பொங்கி
விழி கலங்கினர் ; மெலிந்தனர் ; இணையிலா வீரர் !

—

தலை சுழன்றனன்; தாளிணை சுழன்றனன் ராமன்;
நிலை சுழன்றனன்; நெஞ்சமும் சுழன்றனன்; சுழல,
மலை சுழன்றது; வையகம் சுழன்றது; கடலின்
அலை சுழன்றது; விண்ணிலும் ஆதவன் சுழன்ருன் !

## தேர் சென்ற வழி

அண்ணனைத் தேற்றினன் லக்ஷ்மணன்;
அடவியில் தேர்த்தடம் காட்டினன்.
கண்ணெனும் சீதையைத் தேடியே
கடுகினர், காளையர் போயினர்.

பலகளம் கண்டனர் ; குருதியில்
பறவையின் மன்னவன் விம்மினன்.
பொடிபட வீழ்ந்தனர் ; தாதையின்
புண்ணுடல் தழுவினர் ; பதறினர் !

அணைத்தனர், மெல்லெனத் தூக்கினர் ;
"ஐய, நின் சாவினைக் காணவோ
இணைத்தனம் பெரியவில் ஏந்தினேம் ?"
என்றனர் ; மைந்தரும் ஏங்கினர்.

## ஜடாயுவின் சேதி

தாக்கிய ராவணன் சதிஎலாம்
சாற்றினன், புள்ளினப் புண்ணியன்.
மூக்குற இளையவர் உச்சியை
மோந்தனன், பொன்னுயிர் நீங்கினன்.

மண்ணிலும் விண்ணிலும் அழிவிலா
வாழ்வு ஜடாயுவும் எய்தினன்!
அண்ணனும் தம்பியும் நீர்க்கடன்
ஆற்றினர், அழுதனர், ஏகினர்.

## சபரி மோட்சம்

அடவியில் நடந்தனர், அணிந்தவில் வீரர் ;
அருந்தவம் இயற்றிய சபரியைக் கண்டார்.
சுடர்விழி மல்கிய நீரொடும் வந்து
தொழுதனள் தூயவள், நறும்கனி படைத்தாள்.

பரவசம் எய்தினுள் ; மைந்தரை நோக்கிப்
  "பலித்தது பண்ணிய புண்ணியம்," என்ருள்.
"வரமகள் சீதையை மீட்கவும் தெற்கே
  வானரர் உதவியைக் கொள்ளுக," என்ருள்.

மாதவ வலிமையால், முதியவள், உலக
  வாழ்க்கையை உதறினுள் ; வானகம் போனுள்.
நாதனும் தம்பியும் வியந்தனர் ; போற்றி
  நடந்தனர் ; அன்னையின் நல்லுரை கொண்டார்.

தென்திசை ஏகினுர் ; வானரர் வாழும்
  சிறுமலை நாடினுர் ; பெருவழி கடந்தார்.
பொன்னெழில் மின்னிய புனல்எழும் பம்பைப்
  பொய்கையைப் பார்த்தனர் ; கரையிலே நின்ருர்.



## விரனார நண்பர்

தேங்கிய பொய்கையில் தாமரை கண்டான்,
  தேவியின் திருமுகம் கண்டனன் ராமன் ;
மாங்குயில் வழங்கிய மெல்லிசை கேட்டான்,
  மண்மகள் சீதையின் தேன்குரல் கேட்டான்.

நாயகன் ஏங்கினன்; அருள்மனம் நைந்தான் ;
  நயம்பட லக்ஷ்மணன் ஆறுதல் மொழிந்தான்.
ஆயினும் இனியவன் இரவெலாம் துயிலான் ;
  அணிமலர்ச் செல்வியின் துயரமே நினைத்தான்.

## அனுமன் கண்ட அதிசயம்

விடிந்ததும் வீரர், பொய்கையை நீங்கி
  விரைந்தனர் ; ரிசிய மூகமா மலையை
அடைந்தனர் ; குகையில் வாழ்ந்தசுக் ரீவன்
  அஞ்சினன், "பகைவர் அணுகினர்," என்றான்.

உறுதுணை நின்ற அனுமனை அழைத்தான் ;
  "உண்மையைச் சென்று காணுக," என்றான்.
மறைமொழி பயிலும் மாணவன் போல
  மாற்றுருக் கொண்டு, மாருதி போனன்.

புதுமையைக் கண்டான்; கரடியும் புலியும்
புதுவழி அமைக்க, மதுமலர்க் கிளைகள்
இதமுற வளைந்து சாமரை விசிற,
ஏறினர்; இணைந்து காளையர் வந்தார்.

பாறையும் முள்ளும் திருவடி தழுவிப்
பங்கய மலர்போல் மென்மையைப் பூண,
ஊறிய மேகம் பனித்துளி தெளிக்க,
உத்தமர் மலையின் உச்சியைச் சேர்ந்தார்.

## சொல்லின் செல்வன்

பெருமானை எதிர்கொள்ள
அனுமான் வந்தான்;
பேரன்பு பெருக,மனம்
எழுந்து துள்ளக்
கருமேனி இறையவனைக்
கருணை பூத்த
கற்பகத்தை, அற்புதத்தை,
வணங்கி நின்றான்.

அஞ்சனைக்கும் வாயுவுக்கும்
அருமை மைந்தன்;
அருள்மறையின் பொருள்பொதிந்த
சொல்லின் செல்வன்;

வெஞ்சமரில் தனக்குவமை
தானே ஆவான்;
விண்ணுக்கும் அடங்காமல்
விரிந்த தோளான்.

உரைபயிலும் மணிக்குரலில்
கடுமை இல்லான்;
உள்ளத்தில் ஐயம்இலான்;
சோர்வும் இல்லான்;
திருவிழியில் பிழைஇல்லான்;
கடமை பூண்டான்;
செயல்வீரன்; பேரறிஞன்;
அழியா நண்பன்.

காராவைக் கண்டஇளம்
கன்று போலக்
களிகொண்டான்! மைந்தருக்கு
முகமன் நல்கித்
தீராத சுக்ரீவன்
துயரம் சொன்னன்;
"செஞ்சுடரே! புகல்அருள
வருவாய்," என்ருன்.

## வனம் புகுந்த வரலாறு

மைந்தரில் இளையோன், தங்கள்
வரன்முறை நவின்றான்; "ஈன்ற
தந்தையின் சொல்லைக் காக்கத்
தவநிலை அடைந்தோம்," என்றான்.

இலங்கையின் அரக்கன் செய்த
வஞ்சமும் எடுத்துச் சொன்னான்;
" நலம்தரும் நட்புத் தேடி
நாடினோம் குன்றம்," என்றான்.

மாருதி பணிந்தான்; பூண்ட
மாணவ வடிவம் மாற்றி,
மேருவைப் போல ஓங்கி
மெய்யுருக் காட்டி நின்றான்.

தொழுதனன், கடுகிச் சென்றான்;
"தோழனைக் கொணர்வேன்," என்றான்.
விழுமிய வில்லின் செல்வர்
வியந்தனர், கவலை தீர்ந்தார்.

## நல்லுயிர் நண்பர்

வானர வேந்தன் வந்தான்;
வள்ளலின் சரணம் கண்டான்.
ஞானநா யகனும், "நீஎன்
நல்லுயிர் நண்பன்," என்றான்.

பரிவுற அணைத்தான்; "உன்றன்
பகைவர்என் பகைவர்," என்ருன்.
எரிதழல் சான்று காட்டி
இயம்பிஞன் அயோத்தி வீரன்.

"தீயவர் எனினும், நின்னைச்
சேர்ந்தவர் எனக்கும் சேர்ந்தார்;
ஆயஎன் சுற்றம், உன்றன்
சுற்றமே ஆவார்," என்ருன்.

நீலனும் நளனும் என்ன
நிகரிலாச் சேனை வீரர்,
வேலையின் அலையைப் போல
மேவினர்; வாழ்த்தி நின்ருர்.

"வாலியின் காலன் வந்தான்;
வந்தனன் பெரியோன்," என்ருர்.
சோலையில் மலர்கள் கொய்து
தூவினர்; இருக்கை செய்தார்.

அனைவரும் இணைந்து சென்ருர்;
அரும்கனி விருந்து துய்த்தார்.
இனியவன் ராமன் கேட்க,
இடர்எலாம் அனுமான் சொன்னன்.

# வாலியின் வஞ்சகம்

"வானரரில் மிகவல்ல
வாலியுடன், முன்ஞெருநாள்,
கான்உறைந்த கடும்பகைவன்
மாயாவி போர்தொடுத்தான்.

ஆற்ருமல், குகைஒன்றில்
அடல்அரக்கன் போய்ஒளிந்தான்.
மாற்ருனை உயிர்குடிக்கத்
தொடர்ந்தானும் மாமன்னன்.

பின்பிறந்த சீராளன்,
பெருங்குணத்தான் சுக்ரீவன்
நின்றிருந்தான், குகைவாயில்
நெடுங்காலம் காத்திருந்தான்.

ஈராண்டு காணுமல்,
"இறந்தானே வாலி?" என
ஊர்மாந்தர் வற்புறுத்த
உத்தமனும் முடிபுனைந்தான்.

திடுமென்று பின்ஞெருநாள்
திறல்வாலி வெளிவரவும்,
அடிபணிந்தான் சுக்ரீவன்;
அகம்மகிழ வரவேற்ருன்.

அடிபணிந்த இளையவனை
அடித்தானே சினமுடையான்;
குடிகெடுத்தான் கொலைகாரன்;
கொழுந்தியையும் அபகரித்தான்.

எதிர்நிற்க வலிஇன்றி,
இடர்களையத் துணைஇன்றி,
பதிஅகன்றான் சுக்ரீவன்,
மனையாளைப் பறிகொடுத்தான்.

மறைவாக உயிர்பிழைக்க
இம்மலையில் வாழ்கின்றான்.
சிறியேனும் அவன்அடிமை,"
எனஅனுமான் தெரிவித்தான்.



## வாலியின் வீழ்ச்சி

வாலி புரிந்த வஞ்சகம் கேட்டு,
நீல வண்ணன் நெஞ்சம் கொதித்தான்.

"இருப்பிடம் காட்டுக; எதிரியின் உயிரை
நெருப்பென நின்று நெருக்குவேன்," என்ருன்.

எண்ணம் மகிழ்ந்தனர், எனினும் வானரர்
அண்ணலின் வலிமையில் ஐயம் கொண்டார்.

ஐயம் நீங்க அற்புதம் செய்தான்,
எய்யும் வில்லில் இணையிலா ராமன்.

## அம்பின் ஆற்றல்

கானக வழியில் கல்லென இறுகி
வானுற வளர்ந்த மராமரம் ஏழும்,

ஒருங்கே பிளக்க ஒருகணை பூட்டி,
மருங்கு நின்ருர் மருளவும் எய்தான்.

மாருதி ஆடினன்; வானர மன்னன்
பாரிடை வீழ்ந்து, பாதம் பணிந்தான்.

ஆற்றலை வியந்தனர், ஆர்த்தனர், பாடிப்
போற்றினர், அனைவரும் பூம்பொழில் போனர்.

# நகை முடிப்பு

சோலையிலே இளைப்பாறி
இருந்த நேரம்,
சுக்ரீவன் முடிப்பொன்று
கொணர்ந்து வைத்தான்.
மேலிருந்த துகில்அவிழ்த்து
விமலன் பார்த்தான்;
விழியிரண்டும் ஆறுகத்
துடித்தான் உள்ளம்.

ஜானகியின் பூமேனி
நகைகள் கண்டான்;
தாளாமல், நினைவிழந்து
தலைவன் சாய்ந்தான்!
வானரர்கோன் தடக்கைகள்
நீட்டித் தாங்கி,
"மாவீரா, நீவருந்தப்
போமோ?" என்றான்.

"அன்றொருநாள் ராவணனை
விண்ணில் பார்த்தோம்;
அகம்குமுறிப் பெண்ணரசி
அழவும் கேட்டோம்;

குன்றின்மேல் நகைகழற்றி
எறிந்தாள் தேவி;
குறிப்பாகக் கையேந்திப்
பிடித்தோம்," என்றான்.

## மாருதியின் கோரிக்கை

மாருதியும் ராகவனை
வணங்கி, "முன்னால்
வாலிவதம் முடித்தருள்க;
முடித்த போதே,
வீரர்பலர் சுக்ரீவன்
ஏவல் கொள்வார்;
வெள்ளமென உலகெங்கும்
செல்வார்," என்றான்.

"ஜானகியின் உறைவிடத்தைத்
தேடிக் காண்போம்;
சமர்புரிவோம்; அரக்கரைவேர்
அறுப்போம்," என்றான்.
கான்இருந்த பெருமானும்
கருணை கூர்ந்தான்;
கடுநடையில் கிஷ்கிந்தை
நகரம் சேர்ந்தார்.

## சுக்ரீவன் தோல்வி

போயினன் இளைய வானரன் தனியே
 போரிடப் புயல்போல் அண்ணனை அழைத்தான்.
ஆயபஞ் சணையில் உறங்கிய வாலி
 ஆர்த்தனன்; கல்லும் தூள்படக் குதித்தான்.

மனையவள் தடுத்தும் கேட்டிலான்; மண்ணும்
 வானமும் வெடிக்கச் சீறினன் வாலி.
பனிபடர் இருளில் கீழ்த்திசை உதிக்கும்
 பரிதிபோல், உயர்ந்த மலைமிசை நின்றான்.

கட்டினன்; எதிர்த்த தம்பியை இழுத்துக்
 கவிழ்த்தனன்; அடித்தான்; கடுஞ்சினம் தெறிக்க
முட்டினன்; கடித்தான்; மோதினன்; உடலை
 முறித்தனன்; மிதித்தான், ஏமனே போன்றான்.

தோற்றனன் சிறிய வானரன்; சென்று
 துதித்தனன்; "ராமா! அருளுக," என்றான்.
வேற்றுமை தெரியக் கொடிமலர் சூட்டி,
 மீளவும் போக விடுத்தனன் தலைவன்.

## மறுபடியும் போர்

வானரர் எதிர்த்தார், மறுபடியும்
 மற்போர் தொடுத்தார் மலைமீதில்;
ஜானகி ராமன் மறைவாகத்
 தருணம் பார்த்துக் காத்திருந்தான்.

வாங்கிய அடியில் உயிர்குன்றி
  மயக்கம் கொண்டான் சுக்ரீவன்;
வீங்கிய முகமும் புண்ணுக
  வீழ்ந்தான்; குருதி பொங்கியதே.

## வாலிவதம்

துடிக்கும் இளேயோன் உடல்பற்றித்
  தூக்கி எடுத்தான்; கல்லின்மேல்
அடித்துக் கொல்லக் குறிவைத்தான்;
  ஐயோ, வாலி அருள்இல்லான்!

தொலேவில் நின்ருன் ஸ்ரீராமன்;
  தோழன் அடைந்த இடர்கண்டான்;
சிலேயை வளேத்தான், இமைப்போதில்
  செல்ல விடுத்தான், ஒருபாணம்.

குமுறும் வாலி தடமார்பில்
  குமரன் கணேயும் பாய்ந்ததுவே.
நிமிரும் மலேயே கவிழ்ந்ததுபோல்
  நிலத்தில் வீழ்ந்தான்; நிலேசாய்ந்தான்.

## அம்பிலே அடையாளம்

மார்பினிலே தைத்த
  கூர்அம்பு வாங்கி
வாசித்தான் வாலி;
  ஆச்சரியம் பொங்கச்

சீர்பெருகும் ராமன்
திருப்பெயரைக் கண்டான்;
சிந்தித்தான்; "நேர்மை
தேய்ந்ததுவோ?" என்ருன்.

எதிர்வந்தான் ராமன்;
தருமநெறி சொன்ஞன்;
"எளியோனை வாட்டி
இடர்புரிந்தாய் அன்ருே?
மதிஇழந்தாய், தம்பி
மனைவியையும் கொண்டாய்;
வன்கொடுமை தீர
வழிஅமைத்தேன்," என்ருன்.

மாவீரன் வாலி
மனக்குழப்பம் மாறி,
மைந்தனையும் நின்ற
தம்பியையும் வாழ்த்தி,
நாவார ராமன்
நற்கருணை போற்றி,
"நலியாத வாழ்வு
நான்பெற்றேன்," என்ருன்.

## அங்கதன் அடைக்கலம்

அங்கதன், வாலி மைந்தன்,
ஆற்றலும் அறிவும் பூண்டான்,
பொங்கிய விழிநீர் மல்கப்
புண்ணியன் பாதம் வீழ்ந்தான்.

அடைக்கலம் ஏற்ருன் ராமன்;
அரியபொன் உடைவாள் ஈந்தான்.
ஒடுக்கிய பகைமை நீங்கி
உயர்ந்தனர் சேனை வீரர்.

## தாரையின் துயரம்

வாலியின் சடலம் கண்டு
மயங்கினள் மனைவி தாரை;
ஒலிட உணர்வும் இன்றி
உலர்ந்தனள்; அழுந்திச் சோர்ந்தாள்!

மாருதி வந்தான்; மெல்ல
மங்கையைப் போக்கி, ஈமக்
காரியம் முடித்தான்; பின்னர்
ராமனைக் காணச் சென்ருன்.



## சேனையின் அணிவகுப்பு

மறுநாள் பொழுது புலர்ந்தவுடன்,
மகுடம் புனைந்தான் சுக்ரீவன்;
இறவா நட்பின் நாயகனை
இருதாள் வணங்கி எதிர்நின்றான்.

ஆசி புகன்றான் ரகுவீரன்;
அறமும் சொன்னான்; "ஆன்றோரின்
நேசம் பயின்று, நெறிநின்று
நிலைப்பாய்," என்றான் நிகர்இல்லான்.

"மாரிக் காலம் தீர்ந்தவுடன்,
மன்னா வருக! படைசேர்த்துச்
சீரில் சிறந்த திருமகளைத்
தேடிக் காண்க," எனமொழிந்தான்.

## அங்கதனுக்கு இளவரசுப் பட்டம்

நன்றி நவின்றான் சுக்ரீவன்;
நகரம் புகுந்தான்; அங்கதனை
மன்றம் இருத்தித் தனக்கிளைய
மன்னன் எனவும் நியமித்தான்.

விரதம் காக்கக் குலராமன்
மீண்டும் ரிசிய மூகமலை
மருவிச் சென்றான்; சாலையிலே
வாழ்ந்தான்; தம்பி துணை நின்றான்.

## கார்காலம் வந்தது

விண்வெளியில், தென்திசையை
வெங்கதிரோன் நாடிவர,
மண்உலகம் இருள்பெருக,
மாங்குயிலும் இசைமறக்க,

இடிகுமுறி மழைபொழிய,
இருகரையும் நதிபரவ,
நெடுமரமும் பெருங்காற்றில்
நிலைதவறிக் கிளைமுறிய,

உடல்ஒடுங்கி உயிர்வருந்த,
ஊர்எங்கும் குளிர்உறையக்
கடல்அலையில் பனிஉலவக்
கார்காலம் வந்ததுவே.

ஜயராமன் பொழுதெல்லாம்
ஜானகியை நினைவானுன்;
அயராத திருமனமும்
அருந்துயரச் சுழல்ஆனுன்.

## துவணை தீர்ந்தது

மாதம் நான்கு கழிந்தது; நீல
மணிபோல் மலர்ந்து தெளிந்தது வானம்.
நாதன் நொந்தான்; வானரர் வைத்த
நாளும் சொல்லும் அழிவுறக் கண்டான்.

போனுன் இளையோன், காரணம் அறியப்
புனிதன் தொடுத்த அம்பெனப் பாய்ந்தான்.
நாலு புறமும் வானரர் நடுங்கி
நலிந்தார், நகர வாயிலை அடைத்தார்.

கதவும் மதிலும் தூள்பட உதைத்துக்
கல்லும் நொறுங்க லக்ஷ்மணன் புகுந்தான்.
மதுவின் வெறியால், வானர வேந்தன்
மயங்கிக் கிடந்தான்; சூழ்நிலை உணரான்.

"அந்தோ," என்ருன், அங்கதன் பதைத்தான்;
"அழிந்தோம் இன்றே அனைவரும்," என்ருன்.
வந்தாள் தாரை; பேரிடர் மாற்ற
வழியில் நின்ருள்; வீரனைத் தடுத்தாள்.

## மனமாற்றம்

மஞ்சள் பூசும் மகிமை இழந்த
மங்கையின் அன்பு முகம்கண்டான்
செஞ்சொல் மைந்தன்; அன்னையர் தமையும்
சிந்தனை செய்தான்; துயர் கொண்டான்.

சீற்றம் தீர்ந்த தருணம் உணர்ந்து
சென்றனன் அனுமான்; அடிதொழுதான்;
"காற்றின் மகனே, கடமையை நீயும்
மறந்தனை," என்ருன் கணைவீரன்.

## அரண்மனைக்கு அழைப்பு

"மறந்திலன்," என்ருன் மாருதி; திரண்ட
வானரர் படையின் வலிசொன்ஞன்.
"அறம்துணை கொண்ட ஐயனே, வருக,
அரண்மனை செல்வோம் இனி," என்ருன்.

உறங்கிய மன்னன் குடிவெறி நீங்கி
உணர்வும் அடைந்தான்; திடுக்கிட்டான்.
திறம்பட முரசம் முழங்க,முன் வந்து
செம்மலே வணங்கி வரவேற்ருன்.

## சுக்ரீவன் வேண்டுகோள்

“கள்ளினுல் அறிவைக் கொன்றேன்;
கடமையை மறந்து வீழ்ந்தேன்;
வள்ளலே! கருணை கூர்ந்து
வன்பிழை பொறுப்பாய்,” என்ருன்.

அரியணை காட்டி, “மைந்தா,
அமருக; நன்னீ ராடி
மருவுக; விருந்தும் துய்த்து
மகிழுக,” என்ருன் வேந்தன்.

## இளையவன் உருக்கம்

உருகினன் இளையோன்; “அங்கே
உத்தமன் பசியி ளுேடும்
தரையிலே இருக்கப் பொன்னின்
ஆசனம் தகுமோ?” என்ருன்.

“பச்சிலே, கிழங்கு, கொய்த
காய்கனி, பரமன் உண்ட
மிச்சமே எனக்கு விண்ணின்
அமுதமாம்,” என்ருன் வீரன்.

## ராமன் திருவருள்

வானர அரசன் வெட்கித்
தம்பியை வாழ்த்தி, அன்றே
தேனினும் இனிய ராமன்
திருவருள் அடையச் சென்ருன்.

ஐயனும் குற்றம் நீக்கி
அன்பனே அணைத்துக் கொண்டான்.
“செய்யநின் படையைக் கூட்டிச்
சேருக, மறுநாள்,” என்ருன்.

## படை திரண்டது

பரிதியின் பொன்னெளி எழுவதன் முன்னம்,
படைஅணி வந்தது; கானகம் எங்கும்
கருமழை முகிலென மொய்த்தனர் வீரர்.
காண்கென ராமனே அழைத்தனன் அரசன்.

நெடியவன், மாமலை உச்சியில் ஏறி
நின்றனன்; பெருங்கடல் பெயர்ந்தது போல,
வடதிசை இருந்தொரு தென்திசை யாக
வானரர் நடந்தனர், ஆயிரம் கோடி!

சதவலி, மாருதி, கேசரி, நீலன்,
ஜாம்பவன், துன்முகன், தூமிரன், குமுதன்,
பதுமுகன், முதலிய அதிபரும் வந்தார்;
பரமனைப் பார்த்ததும் பணிந்தனர் போனர்

விரிசுடர் விழிகளும், புகைஎழும் சினமும்,
விம்மிய தோள்களும், திண்ணிய நடையும்
மருவிய சேனையைக் கண்டதும் ராமன்
மகிழ்ந்தனன்; சீதையைக் கண்டவன் ஆனன்.



## கடல் கடந்த தூதன்

இருபதுநாள் அணிவகுப்புத் தொடர்ந்த போதும்,
எம்பெருமான் ஒருபாதிப் படையே கண்டான்.
திரைகடலும் சிறிதென்ருன், உவமை கூறத்
தெரியாமல், இளையோனும் திகைத்து நின்ருன்.

தெய்வமகள் ஜானகியைத் தேடிக் காணத்
திசைதோறும் படைத்தலைவர் திரண்டு சென்ருர்.
“வையமெலாம் சோதித்து மாதம் ஒன்றில்
வருக,”எனச் சுக்ரீவன் ஆணை சொன்ஞன்.

## அடையாள மோதிரம்

சொன்னபடி செயல்முடிக்கக்
காற்றின் மைந்தன்,
தோழருடன் தென்திசையில்
பயணம் ஆனான்.
அன்னவனைத் தனிஅழைத்து
வாழ்த்தி, ராமன்
அடையாள மோதிரமும்
அருளும் ஈந்தான்.

"பெண்ணரசி நிலைஅறிக,
ஐயம் நீக்கிப்
பேரன்பு மொழிகேட்டு,
மீள்க," என்றான்.
எண்ணமிசை குடிகொண்ட
மிதிலைக் காட்சி
எடுத்துரைத்தான்; வனம்புகுந்த
அருமை சொன்னான்.

## பழைய நினைவுகள்

மிதிலையிலே முன்னம் முனிவனுடன் சென்றேன்;
மின்னொளியாள் சீதை கன்னிமனை நின்றாள்.
மதுரவிழி காட்ட மறுமுறையும் வந்தாள்;
மாமன்னன் கொலுவில் வான்அமுதம் ஆனாள்.

தந்தைஉரை கொண்டு, லக்ஷ்மணனும் நானும்,
தவஉருவம் தாங்கித் தனிவனத்தை நாடச்
சுந்தரியும் கண்ணீர் சிந்தி,உயிர் நொந்தாள்;
"துணைபிரியேன்," என்று மரவுரியும் பூண்டாள்.

கொடிமதிலைத் தாண்டி அடிபெயரும் முன்னே,
கோமகளும், சின்னஞ் சிறுகுழந்தை போலே,
"இடம்அகன்ற காடும் எய்தியதோ?" என்றாள்.
ஏழைமுகம் நோக்கி என்மனமும் நொந்தேன்!

## தென்திசையில் அனுமான்

இந்தவிதம் ஸ்ரீராமன்
இளநினைவு சொல்ல,
இகல்வீரன் மாருதியும்
அடிபணிந்து நீங்கி,
விந்தியமும், வேங்கடமும்,
செந்தமிழின் தென்றல்
விளையாடும் வளநிலமும்,
ஆராய்ந்து சென்றான்.

பழம்உதிர்ந்த சோலையிலும்,
அழல்எரிந்த பொல்லாப்
பாலையிலும், இருள்நிறைந்த
குகைகளிலும், தேடி
அழகிருந்த ஜானகியைக்
காணமல் வாடி,
அலைஎறிந்த தென்கடலின்
கரைவந்து சேர்ந்தான்.

துணைஇருந்த வாலிமகன்
மனம்முறிந்து வீழ்ந்தான்;
துயர்பெருகி, ஜாம்பவனும்
"உயிர்விடுவோம்", என்றான்;

அணிசெறிந்த படைவீரர்
செயல்இழந்து நின்ருர்;
அனுமானே முன்வந்து
பெருங்கடமை சொன்னன்.

"மறுபடியும் நிலம்புகுவோம்;
வானத்தில் பாய்வோம்;
மலேஉச்சி, நதிவயிறு,
பாதாளம் காண்போம்;
அறம்உணர்ந்த ஜடாயுஎனக்
கொடியசமர் பண்ணி
அரியஉயிர் மாய்ந்தாலும்
பணிமறவோம்," என்ருன்.

## சம்பாதியின் வரலாறு

பறவையின் திலகன் ஆன
ஜடாயுவின் மரணம் கேட்டுப்
பதைத்தனன், அருகே வாழ்ந்த
தமையன், சம்பாதி என்பான்.
திறமையின் தலேவன் ஆன
அனுமனே நெருங்கி, "ஐயா,
செப்புக, கொடுமை செய்த
தீயவன் யாவன்?" என்ருன்.

மாருதி பரிந்து, வீரப்
பறவையின் கொடும்போர் சொன்னன்;
"மங்கையை மீட்கச் சென்று
தன்னுயிர் கொடுத்தான்," என்ருன்.

சீரிய முதியோன் கேட்டுக்
களித்தனன், பெருமை பூத்தான்;
"திருமகன் பணியில், தம்பி!
இறந்திலே, வாழ்ந்தாய்," என்றான்.

சிறகிலான், பறக்கும் ஆற்றல்
இழந்தவன், கழுகில் மூத்தோன்,
தேங்கிய பழியும், நேர்ந்த
தீமையும், சொல்லப் போந்தான்.
"எறிகதிர் வேகும் அண்ட
வெளியிலே, முன்னம் ஓர்நாள்,
இளவலும் நானும் சென்றோம்;
எய்தினோம் துயரம்," என்றான்.

"ஆதவன் வெம்மை தாக்கி
அலறினன், ஜடாயு வெந்தான்;
அன்பினல் சிறகின் கீழே
அணைத்து,நான் நீழல் தந்தேன்;
வேதனை எனக்கே ஆகி,
இறகுகள் கருகி வீழ்ந்தேன்;
விண்ணுறும் மேன்மை கெட்டுத்
தனிமையில் மெலிந்தேன்," என்றான்.

"சீதையை அரக்கன் தூக்கித்
தென்திசை ஓடக் கண்டேன்;
திரைகடல் அரணும், சேனை
வலிமையும், அமையப் பெற்றான்;

ஆதலால் ஒருவர் மட்டும்
அக்கரை மறைந்து செல்வீர் ;
அடியனேன் உய்ய, ராம
நாமமும் சொல்வீர் !" என்ருன்.

## திருப்பெயர் மகிமை

"கோசல ராமா, தசரதன் அருமைக்
குமரா, தாடகை குலகாலா,
மாசறு வேள்விச் சாலையில் அந்நாள்
மன்னிய காவல் கணைவீரா !

அகலிகை சாபம் நீக்கிய பாதா,
அஞ்சன வண்ணு, ஸ்ரீராமா,
மகிழ்வுறும் சீதை சூட்டிய மாலை
மார்பில் இலங்கும் மணவாளா !

பொன்முடி துறந்த பூம்புகழ் மன்னு,
புண்ணிய வேடன் உயிர்நண்பா,
வன்முறை அரக்கர் வஞ்சனை குலைய
வரிசிலை தொடுத்த ஜயராமா !"

என்றனர் ; நாமம் ஆயிரம் பாடி
ஏத்தினர் வானரர் ; மறுகணமே
நின்றவர் வியக்க இறகுகள் முளைத்து
நெடுவெளி எழுந்தான் சம்பாதி.

# அனுமான் பாய்ந்தான்

வானரர் எழுந்தார் ;
"காரியம் கருதிக் கடன்ஆற்ற
மாருதி போல்வார்
வேறிலர்," என்றார் ; புகழ்சொன்னார் ;
"ஞானம் உணர்ந்தாய்,
வேகம் உயர்ந்தாய், போர்வல்லாய்,
நன்மை தெளிந்தாய்,
போய்வர நீயே தகும்," என்றார்.

"அன்பரின் அருளும்,
நாயகன் பணியும், சிறகாக
அலைகடல் கடப்பேன்,"
என்றனன் அனுமான், விடைகொண்டான்.
தென்புறம் நிமிர்ந்த
மகேந்திரம் என்னும் மலைஏறித்
தேவரும் போற்றப்
பேருரு எய்தித் தனிநின்றான்.

ஆய்ந்தனன் ; எதிரே
அழகிய இலங்கை நகர்கண்டான் ;
ஆர்த்தனன் ; மலையும்
மண்ணிடை அழுந்தக் கால்ஊன்றிப்
பாய்ந்தனன் அனுமான் ;
மார்பு குறுக்கிக் கைநீட்டிப்
பறந்தனன், விண்ணும்
குலுங்க விரைந்தான் மாவீரன்.

## உயிர் தந்த மோதிரம்

மாருதி பாய்ந்தான்; பெருவிசை கண்டு
வானிடை மின்னல் நாணி ஒடுங்க,
வாரிதி தாண்டி, இலங்கையின் அருகே
மருவிய பவள மலையிலே குதித்தான்.

கடும்புயல் தகர்க்கும் மரக்கலம் போலக்
கடிநகர் கவிழ்ந்து, நிலைதடு மாற,
நெடும்பதம் வைத்து நின்றனன், அனுமான்;
நினைவெலாம் ராம நாமமே பூண்டான்.

## நகர அழகு

கண்டனன், எதிரே சுடர்மயம் ஆன
கனகமா மாடம், கோபுரம், நடன
மண்டபம், பளிங்கு பாவிய வீதி,
மரகதச் சோலை, மதுமலர்ப் பொய்கை.

நீர்மிகும் அகழி சூழ்ந்தநன் மதிலும்,
நிரம்பிய படையும், நவநிதிப் பொலிவும்,
மாருதி பார்த்து வியந்தனன்; "இலங்கை
மன்னவன் புரிந்த தவப்பயன்," என்றான்.

பெருகிய உருவம் சுருக்கினான் வீரன்;
பிற்பகல் முழுதும் குன்றிடை இருந்தான்.
விரிநகர் துலங்க வெண்மதி எழவும்
விரைந்தனன்; கோட்டை வாயிலை அடைந்தான்.

# இலங்கிணி எதிர்ப்பு

வேகும் தீயெனத்
தலைமுடி சிவந்த படைவீரர்,
வேலும் வில்லும்
ஏந்திய அசுரர், தடைநின்றார்.
போகும் வழியை
மாருதி மாற்றி, மதில்ஏறிப்
புறநகர் கண்டான்;
நில்லென அதட்டும் குரல்கேட்டான்.

இலங்கிணி என்னும்
காவல் அரக்கி எதிர்வந்தாள்;
"ஏகுக, இன்றேல்,
சாவாய்," என்றாள், இடிஆனாள்;
குலுங்கிய காலில்
சிலம்பு தெறிக்கக் குதிகொண்டாள்;
கொல்லும் கூர்வேல்
வாங்கி எறிந்தாள், பகைசூழ்ந்தாள்.

முறித்தான் அனுமான்;
புன்னகை பூத்தான்; மறுபடியும்
மோத முனைந்த
பேதையை இறுக்கிப் படைஎல்லாம்
பறித்தான்; கையால்
ஓங்கி அறைந்தான்; மண்ணின்மேல்
பாயும் குருதிச்
சேற்றில் விழுந்தாள், உடல் நொந்தாள்.

அஞ்சனை மைந்தன
கைத்தலம் பட்டு வினை நீங்கி,
அரக்கியும் தெய்வக்
கன்னிகை ஆனாள், விடைபெற்றாள்.
வஞ்சனை நிறைந்த
மணிநகர் புகுந்தான்; தும்பிஎன
மாருதி அலைந்தான்;
வீடும் வெளியும் ஆராய்ந்தான்.

## எங்கும் தேடுதல்

பஞ்சணையை நீங்காதான்
கும்ப கர்ணன்,
பழிஇல்லான் விபீஷணனும்
பரம ஞானி,
வெஞ்சமரே தொழிலுடைய
அசுர மைந்தர்,
விழிதுயின்ற இடம்துருவி,
அகன்றான் வீரன்.

மயன்மகள்மந் தோதரியின்
இல்லம் சென்றான்;
மைதிலியோ எனமயங்கித்
திகைத்து மீண்டான்.
அயல்இருந்த பொன்மனையில்,
இலங்கை மன்னன்
அயர்ந்ததனி நிலைகண்டான்,
"கொல்வேன்," என்றான்.

மனம்தெளிந்தான் மறுகணமே
அனுமான்; "இந்த
வல்லரக்கன் தலைகிள்ளி,
நிலத்தில் சாடிச்
சினம்முடிப்பேன், என்றாலும்
தகுமோ? ராமன்
திருக்கணையின் சிறப்புக்குப்
பழியாம்," என்றான்.

மாளிகையின் புறம்வந்தான்;
"அந்தோ! இன்னும்
மலர்மகளைக் கண்டிலனே;
கருணை இல்லா
வாள்அசுரன் கொன்றானோ?
மாயம் கூட்டி
மறைத்தானோ?" எனஇதயம்
கலங்கி நின்றான்.

## சிறை இருந்த சீதை

கலக்கமுறும் நேரத்தில்,
புதிதாக மலர்ச்சோலை
கண்ணுற்றான்; மர நிழலில்,
அரக்கியரின் நடுவாகக்
குலக்கொடியும், கலைஇழந்த
மதிபோல வீற்றிருந்தாள்;
குலையாத கோதண்ட
நாயகனை நினைவாளள்.

இமைமறந்த திருவிழியும்,
சடைவிழுந்த கருங்குழலும்,
எழில்மறைந்த பூந்துகிலும்,
பெருமூச்சும், கண்டவுடன்
"விமலைஇவள், ஜானகியே,"
எனத்தேர்ந்தான், அனுமானும்
மெய்உருகிக் கைகுவித்தான்;
கிளையேறிக் காத்திருந்தான்.

## ராவணன் மமதை

நள்ளிரவில், இலங்கையர்கோன்
நந்தவனம் வந்தடைந்தான்;
நலம்அகன்ற மொழிபுகன்றான்;
வைதேகி மனம்துடித்தாள்;
"வெள்ளமெனும் அரக்கர்குலம்
வேர்ஒடிக்க, ஜயராமன்
வில்வளைப்பான், நின்மமதை
பிடிசாம்பல் ஆம்,"என்றாள்.

விழிசிவந்தான், போர்அசுரன்;
"மிதிலையையும் அயோத்தியையும்
வென்றழிப்பேன், உயிர்குடிப்பேன்,"
எனமுழங்கி, வெளியேற—
மழைஅருவி எனஅழுதாள்;
மாதரசி திறம்அழிந்தாள்;
வாள்சுழற்றிக் கடும்கோப
அரக்கியரும் புடைசூழ்ந்தார்.

## திரிஜடையின் ஆறுதல்

காவல் நின்ற மடந்தையரில்
  கருணை பயின்றவள், திரிஜடையாள்,
"பாவம்," என்ருள்; ஜானகியைப்
  பார்த்தாள், ஆறுதல் உரைசெய்தாள்.

மாருதி, அதுவே தருணம்என,
  மந்திரம் ஒன்று சிந்தித்தான்.
காரிருள் மேனி அரக்கியரும்
  கண்இமை மூடித் துயில்கொண்டார்.

## சீதையின் சோர்வு

நாயகி சோர்ந்தாள்; நல்லுறுதி
  நலிந்தாள்; "சாவேன்," எனஎழுந்தாள்.
போயினள், மாதவி மரக்கிளையில்
  பொன்னுயிர் போக்க மனம்வைத்தாள்.

அனுமான் பாய்ந்தான், தாயின்முன்
  அங்கம் குறுகி அடிபணிந்தான்.
"இனியோன் ராமன், எம்பெருமான்
  ஏவிய தூதன் நான்," என்ருன்.

## மோதிரம் தந்தான்

தலைமகன் பெயரைக் கேட்டு
  ஜானகி சிலிர்த்தாள் உள்ளம்.
நிலமிசை விழிநீர் வீழ
  நின்றனன், காற்றின் செல்வன்.

அன்னையின் ஐயம் நீக்க,
அஞ்சன வண்ணன் சொன்ன
இன்னுரை நவின்றான் தூதன் ;
மோதிரம் எடுத்துத் தந்தான்.

## ஆரா இன்பம்

கண்டனள், மேனி எங்கும்
களிப்பெனும் மின்னல் பாய
அண்டர் நாயகியும் வாங்கி
அணைத்தனள்; தலைமேல் வைத்தாள்.

உருகினாள் ; கமலக் கண்ணில்
ஒற்றினாள் ; ஆரா இன்பம்
பருகினாள் ; மோந்தாள் ; ஏந்திப்
பார்த்தனள் ; மீண்டும் பார்த்தாள்.

## சாகா வரம்

வாழ்த்தினாள் அனுமன் தன்னை,
"வள்ளலே, என்னை இந்நாள்
ஆழ்த்திய துயரம் தீர்த்தாய்;
ஆருயிர் அளித்தாய்," என்றாள்.

"குன்றுபோல் உயர்ந்த வீரா,
குறையிலாய், சாவே இன்றி
இன்றுபோல் என்றும் வாழ்க,"
என்றனள், ஆசி சொன்னாள்.

## அழிந்தது பூம்பொழில்!

அம்மையாய், அப்பனுய், அருளொடும் வந்த
அனுமனைக் கனிவுற வாழ்த்திச்
“செம்மலே, கருங்கடல் தாண்டிய விந்தை
செப்புக,” என்றனள் சீதை.

வானக உச்சியும் இடிபட வளர்ந்து,
மாருதி, பேர்உருக் காட்ட,
ஜானகி திகைத்தனள்; “சுருங்குக, பெரியோய்,
சஞ்சலம் நீங்கினேன்,” என்ருள்.

“நிலைத்தது நாயகன் திருப்புகழ்; நீயே
நெடுந்துணை எனில்,வினை உண்டோ?
கொலைத்தொழில் அரக்கரும் குலைந்தனர்,” என்ருள்;
கோமகள் ஆருயிர் குளிர்ந்தாள்.

## அனுமன் யோசனை

அடிமலர் வணங்கினுன், வானர வீரன்;
“அடிமைஎன் தோள்மிசை அமருக, தாயே;
கடிதினில் காற்றென ஏகுவேன்; தலைவன்
கண்ணெதிர் நின்னையும் இறக்குவேன்,” என்ருன்.

திருமகள் மறுத்தனள்; "தூயவன் எனினும்
  தீண்டுதல் கூடுமோ? ஆடவன் அன்றோ?
நிருதரும் தொடருவார்; தனித்துநீ கடும்போர்
  நிகழ்த்திய வேளை,நான் பெரும்சுமை ஆவேன்.

ஆகையால், வில்லொடும் அண்ணலே வருக;
  அனல்எழ ராவணன் ஆக்கையைப் பிளந்து
வாகையும் பெருமையும் சூடுக," என்றாள்,
  மங்கையர் கற்பெனும் வான்சுடர் ஆனாள்.

## சூடாமணி

"இன்னமும் முப்பது நாளில்
  என்சிறை மீண்டிலேன் ஆயின்,
மன்னவன் திருப்பெயர் ஆணை,
  வையகம் வாழ்கிலேன்," என்றாள்.

மன்னவன் காண்கெனச் சூடா
  மணியையும் ஜானகி ஈந்தாள்.
துன்னிய தூதுவன் வாங்கித்
  தொழுதனன்; ஆடையில் பொதிந்தான்.

மும்முறை அன்னையைச் சுற்றி,
  முற்றிய அறிஞனும் அழுது
விம்மினான்; இருகரம் கூப்பி
  விலகினான்; சோலையில் போனான்.

## வனத்தை அழித்தான்

அசுரன் புரிந்த பெரும்பழியை
அனுமன் நினைத்தான்; மனம்கொதித்தான்.
பசுமை குலுங்கும் பூம்பொழிலில்
பாய்ந்தான்; பறித்தான், மரம்எல்லாம்.

ஒடித்தான்; பிளந்தான்; பொடிஆக்கி
உதிர்த்தான்; இழுத்தான்; கையோங்கி
இடித்தான்; மிதித்தான்; நகர்எங்கும்
எறிந்தான்; சீற்றம் குறையாதான்.

ஏடு திறக்கும் புதுமலரும்,
இலையும் சிதற, மரக்கிளையின்
கூடு துறந்து, பறவைஇனம்
குற்றுயிர் ஆகிக் குலைந்தனவே.

இடியே ஆனான்; புயல்ஆனான்;
ஏறும் காட்டுத் தீஆனான்;
நெடியோன் திரண்ட தோள்கொட்டி
நின்றான்; இரவும் நடுங்கியதே.

## அரக்கர் நடுக்கம்

நடுங்கினர் காவலர்; அலறி ஓடினர்;
நறும்பொழில் எய்திய அவலம் கூறினர்.
கடுஞ்சின ராவணன் கடிந்து கூவினன்;
கண்ணிலும் சொல்லிலும் தீயை ஊதினன்.

"உயிருடன் பகைவனைக் கொணர்க," என்றனன்.
ஓடினர் கிங்கரர், போரில் சாய்ந்தனர்.
புயவலி குமுறிய சம்பு மாலியும்
போயினன்; தலைமுடி கவிழ வீழ்ந்தனன்.

## தலைவர் மாய்ந்தனர்

சேனையின் நாயகர் ஐவர் கூடினர்;
சீறிய பெரும்படை சேர்த்து மோதினர்;
வானரர் திலகனைச் சூழ்ந்து தாக்கினர்;
வாளென வில்லென உருவி வீசினர்.

மாருதி, நாற்புறம் பாய்ந்து சாடினன்;
மங்கள ராமனைப் பாடி ஆடினன்;
வீரரை வாரினன், விண்ணில் போக்கினன்;
வீழ்ந்தவர் உயிரையும் மண்ணில் வாங்கினன்.

தேரினை உடைத்தனன்; உடைந்த சக்கரச்
சில்லினல் யானையை ஓங்கி வெட்டினன்;
கூரிய யானையின் கொம்பு பாய்ச்சியே
குதிரையின் கூட்டமும் கொன்று நீக்கினன்.

## அட்சன் மடிந்தான்

அரச குமாரன் அட்சன் எழுந்தான்;
அனுமனைப் பிடிக்க, இருநூறு
புரவி இணைத்த பெருந்தேர் ஏறிப்
போர்முனை சென்றான்; கணைஎய்தான்.




இரும்புக் கம்பம் எடுத்தான் அனுமான்,
எதிரியின் வில்லைப் பொடிசெய்தான் ;
கரும்பைச் சாறு பிழிவது போலக்
காதகன் உடலைப் பலிகொண்டான்.

அந்தோ, இலங்கை மன்னன் சாய்ந்தான்;
அட்சன் இறந்த துயர்கேட்டு,
மந்தோ தரியும், சிந்தை வெடிக்க
"மகனே," என்ருள், செயல்அற்ருள்.

## இந்திரஜித்தன் போர்

அண்ணன் இந்திர ஜித்தன் விரைந்தான்,
அரும்பழி தீர்க்கக் களம்உற்ருன்.
விண்ணும் மண்ணும் கார்இருள் சூழ,
வில்லிடை அம்பின் மழைபெய்தான்.

மாருதி பாய்ந்தான், பேர்உரு எய்தி,
மாற்ருன் மகனைத் தேரோடும்
வாரி எறிந்தான் ; படையை வளைத்தான் ;
வாட்டி உதைத்தான் ; உயிர்கொய்தான்.

இந்திர ஜித்தன் மீண்டும் வந்தான்;
எடுத்தான், நான்முகன் பாணத்தை
மந்திரம் சொல்லி, வாங்கி விடுத்தான்.
மாருதி ஐயோ, கட்டுண்டான் !



# அனுமன் இட்டதீ!

கட்டுண்ட பெரியோனை
நடத்திச் சென்றார்,
கனகநகர் வீதியிலே
அசுரர் கூடி
மட்டின்றி ஆர்ப்பரித்தார்;
"வதைப்போம்," என்றார்;
"மாகடலின் ஆழத்தில்
புதைப்போம்," என்றார்.

தென்னிலங்கை ராவணனை
நேரில் கண்டு,
ஸ்ரீராமன் பேராற்றல்
இயம்ப என்றே,
பொன்னுடலின் திறம்அடக்கி
அனுமான் போனான்;
புரியாமல், போர்அரக்கர்
குதித்து நின்றார்.

மண்டபத்தில் தவித்திருந்தான்
அசுர வேந்தன் ;
மாருதியைப் பார்த்தவுடன்
எரிந்து சீறி,
"அண்டர்களும் குற்றேவல்
அமர்ந்த நாட்டில்
அமர்புரியத் துணிந்தனை நீ
யாவன்?" என்றான்.

## அசுரனுக்கு அறிவுரை

அஞ்சனையின் தனிப்புதல்வன் மரபு சொன்னான் ;
"அறம்வளர்க்க அவனியிலே பிறந்த செம்மல்,
தஞ்சமெனும் எளியவரைத் தாங்கும் வள்ளல்,
ஜயராமன் பணிஏற்று வந்தேன்," என்றான்.

"வல்லமையில் நீசிறந்தாய் ; வேள்வி செய்தாய் ;
மறைபயின்றாய் ; ஆனாலும், அறிவு குன்றி,
நல்லுலக நாயகியைக் கவர்ந்தாய் ; மீளா
நாசம்எனும் படுகுழியில் வீழ்ந்தாய்," என்றான்.

"ஒருகணையால் வாலிஉயிர் முடித்த வீரன்,
ஒப்பில்லான், படைதிரட்டி அணுகும் முன்பே,
திருமகளைச் சிறைவிடுக ; பிழைத்து வாழ்க ;
சிந்தித்து மனம்தெளிக," என்றான் ஆன்றோன்.

## மரண தண்டனை

அரக்கன் வெகுண்டான்; அறவழி சொன்ன
அறிஞனைக் கடிந்தான்; "கொல்லுக," என்ருன்.
எரிக்கும் கூர்வாள் ஏந்திய கொலைஞர்
எய்தினர் ; கொலுவில் அனுமனைச் சூழ்ந்தார்.

## விபீஷணன் தடுத்தான்

தடுத்தான், தம்பி
விபீஷணன், "அண்ணு,
தருமமோ? தூதனைக்
கொல்வரோ?" என்ருன்.
"விடுத்தால், வானரன்
சென்றுநின் ஆண்மை
விளம்புவான் ; பகைவரும்
அஞ்சுவார்," என்ருன்.

நன்றென ஆணையை
மாற்றினன் வேந்தன் ;
"நண்ணிய தூதுவன்
வாலினைச் சுட்டு,
மன்றமும் அகன்ற
வீதியும் கடத்தி,
வளநகர் எல்லையில்
போக்குவீர்," என்ருன்.

## வாலில் நெருப்பு

இந்திர ஜித்தனும் தந்தையை வணங்கி,
 எழுந்தனன்; இறுக்கிய கணையை அவிழ்த்தான்.
வந்தனர் ஆயிரர், அனுமனை வளைத்தார்;
 வரிந்தனர், கயிற்றினால் மீளவும் பிணைத்தார்.

கந்தையும் துகிலும் மலையெனக் கொணர்ந்தார்;
 கட்டினார்; வாலுற எண்ணெயைச் சொரிந்தார்;
வெந்தணல் கொளுத்தி இடியென ஆர்த்தார்;
 விண்வெளி நடுங்கவே முரசமும் அறைந்தார்.

## சீதையின் வேண்டுதல்

கேட்டனள், ஜானகி பதறினாள்;
 கெக்கலி கொட்டிய அசுரரின்
ஆட்டமும் நோக்கினாள், விம்மினாள்;
 ஐயகோ, எனமனம் உருகினாள்.

தொழுதனள், தீயினை வேண்டினாள்;
 "தூயவள் நான்எனில் சுடுகிலாய்,
விழுமிய நாயகன் தூதனை
 மெல்லெனத் தாங்குவாய்," என்றனள்.

குளிர்ந்தது கொடுங்கனல்; சந்தனக்
 குழம்பென இனிமையை ஊட்டவும்,
தெளிந்தனன் மாருதி; அன்னையின்
 சீதள அருளினை வாழ்த்தினான்.

## ஊர்வலம்

புண்ணியன் அடங்கி ஞற்போல்
  போயினன், அரக்க ரோடும்
எண்ணிலா மாடம் கூடம்
  யாவையும் நெருங்கிக் கண்டான்.

முன்னைநாள் இரவு காண
  முழுநகர் அழகும், சேனை
மன்னிய நிலையும், கோட்டை
  வாயிலும், மதிலும் பார்த்தான்.

சுற்றினன்; ஊரின் எல்லை
  தொட்டதும் விண்ணில் பாய்ந்தான்;
பற்றிய பகைவர் கையை
  உதறினன்; பறந்து போனன்.

## எரிந்தது நகரம்

மனைதொறும் குதித்தான்; வாலை
  நீட்டினன், நெருப்பு வைத்தான்.
கனைகடல் நீரும் வற்ற
  விரிந்தது, தீயின் கற்றை.

கொடிமதில் சரிய, முத்துக்
  கூரையும் சுவரும் சாய,
அடிசுட, முடியும் வேக,
    அலறினர்; அரக்கர் வீழ்ந்தார்.

உட்புகும் அனலில் சிக்கி
உழன்றனன் இலங்கை மன்னன்.
புட்பக விமானம் ஏறிப்
போயினன்; வானில் நின்றான்.

அனுமனும் நகரம் நீங்கி,
ஆழியை மீண்டும் தாவி,
மனமெலாம் மகிழ்வு துள்ள,
மகேந்திர மலையைச் சேர்ந்தான்.

## வானரர் மகிழ்ச்சி

துள்ளினர்; வானர வீரரும் வந்து
சூழ்ந்தனர்; தோழனைப் போற்றி
அள்ளினர்; விம்மிய தோள்மிசை ஏற்றி
ஆடினர்; தழுவினர்; ஆர்த்தார்.

குமுறினர்; நெடியவன் மேனியில் புண்ணும்
குருதியும் பார்த்தனர், அழுதார்.
"அமருக, காய்கனி அருந்துக, களைப்பும்
ஆறுக," என்றனர், தொழுதார்.

அனுமனும் சிந்தை நெகிழ்ந்தனன்; சீதை
அருளிய ஆசியை உரைத்தான்.
"இனியவன் துயரமும் மாற்றுவோம், எழுக,
ஏகுவோம், விரைவினில்!" என்றான்.

## இனிக்கும் சேதி

என்றதும் முந்தினன்; அண்ணலின் இருக்கை
எய்தினன்; குறிப்பினில் உணர்த்தத்
தென்புறம் நோக்கி வணங்கினன்; "கண்டேன்
தேவியை இலங்கையில்!" என்றான்.

"கற்பெனும் தெய்விகக் கதிரொளி கண்டேன்;
கருணையாம் நிலவினைக் கண்டேன்;
அற்புதம் கண்டனன்; பொறுமையைக் கண்டேன்
அன்னையின் முகத்திலே," என்றான்.

## ராமன் உவகை

மலர்மகள் கனிவுற நல்கிய சூடா
மணியையும் மாருதி ஈந்தான்.
விலகிய ஆருயிர் மீண்டது போல
விமலனும் உவகையில் மிதந்தான்!



# அணைமேல் அணை

மிஞ்சிய உவகையில் எம்பிரான்,
விழியிணை மல்கிய நீரொடும்
அஞ்சனை மைந்தனை நோக்கினன்;
அருளுற வாழ்த்தினன், அணுகினன்.

வீரரில் உத்தம வீரனை,
மெய்யொளி நிலவிய அனுமனைப்
பார்மகள் நாயகன் தழுவினன்;
"பரிசிலும் இது," எனக் கூறினன்.

தூதரில் விழுமிய தூதனைத்
தூய்மையின் உருவெனும் அனுமனை
மேதினி மன்னவன் தழுவினன்;
"வெகுமதி இது," என விளம்பினன்.

## சுக்ரீவனுக்குக் கட்டளை

வானர அரசன் சுக்ரீவன்
வந்தான்; "காலம் தாழ்த்தாமல்
சேனையை நடத்தி இலங்கைநகர்
சேர்வோம்," என்றான்; பணிகேட்டான்.

“நாட்டின் வழியே படைபெயர்ந்தால்
நலிவார் ஊரார்; ஆகையினால்
காட்டின் நடுவே செல்க,”எனக்
கட்டளை இட்டான் ரகுராமன்.

## படை எழுச்சி

அடித்தனர் முரசம்; இமைப்போதில்
அடவியை நிறைத்தார் குலவீரர்;
துடித்தனர், விரைந்தார், தலைமகனைத்
தொடர்ந்தனர், ஆயிரம் அணிசேர்ந்தார்.

தென்திசை நடந்தார், காய்கனியும்
தேனும் அருந்திப் பசிநீக்கிப்
பன்னிரு நாட்கள் இடையின்றிப்
பயணம் சென்றார்; கடல்கண்டார்.

கடலும் காற்றும் அடிவருடக்
கரையில் நின்றான் கரியபிரான்.
படையும் நடந்த களைப்பாறப்
பாசறை அமைத்தார்; நிலைகொண்டார்.

## புதுப்பித்த நகரம்

கனல்எரித்த இலங்கைநகர்,
மறுபடியும் அழகுபெறக்
கலைவல்ல வான்உலகப்
பெரும்சிற்பி வந்தடைந்தான்.

மனேஎடுத்தான்; மணிபதித்தான்;
பொன்னுருக்கிப் புதிதாக
மண்டபமும் மாளிகையும்
புறமதிலும் நியமித்தான்.

## ராவணன் ஆலோசனை

மண்டபத்தில் வல்லரக்கன்
கொலுஅமர்ந்தான், "படைஎடுத்த
மானிடரை முறியடிக்க
வழிவகுப்பேன்," எனமுனேந்தான்.
கண்டுரைக்கத் தம்பியரை
வரவழைத்தான்; தலைவரையும்
கழல்அணிந்த மைந்தரையும்
அருகிருத்தி ஆராய்ந்தான்.

## கும்பகர்ணன் வீரம்

பலவாறு படைத்தலைவர்
சூழ்ச்சி சொன்னர்.
"பயன்இல்லை," என
மொழிந்தான் கும்பகர்ணன்;
"சிலைபோலும் ஜானகியைக்
கவர்ந்த போதே
சீர்குலைந்தாய், அண்ணு, நீ
அழிந்தாய்," என்ருன்.

“ஆனாலும், போர்தொடுப்போம்;
வீரம் காப்போம்;
அல்லாமல், பெண்மணியின்
சிறையை நீக்கப்
போனாலும், புகழ்உண்டோ?
பயந்தோம் என்பார்;
பொல்லாத பகைவரெலாம்
துணிவு கொள்வார்;

துணிவடைந்து, படைபெருக்கி,
எதிர்க்கும் முன்பே,
சூழ்ந்தகடல் அரண்கடந்து
புடைப்போம், என்றான்.
அணிமிகுந்த ராவணனும்,
இடியே ஆகி,
“அதம்புரிவோம், புறப்படுக,
இன்றே!” என்றான்.

## விபீஷணன் நல்லுரை

என்றவுடன், விபீஷணனும்
இளைய தம்பி
இடைமறித்தான்; “அரக்கர்குலக்
கொற்றம் வாழ

ஒன்றுரைப்பேன்; திருமகளை
விடுக, அண்ணு,
உத்தமியின் கண்ணீரே
கொடும்தீ !" என்ருன்.

"நீஇழைத்த பிழைஉணர்ந்தாய்;
உணர்ந்த பின்னும்
நெறிமறுத்துப் பேசுகிருய்;
நேர்மை ஆமோ?
காய்உதிர்க்கும் பெரும்புயலாய்,
வீரன் ராமன்
கணைவிடுப்பான்; எதிர்நிற்பார்
யாரே?" என்ருன்.

நலம்அறியான் இலங்கையர்கோன்,
புகைந்து பொங்கி,
நல்லவனை நஞ்சமென
ஒதுக்கிச் சீறி,
"நிலமனிதன் புகழ்இயம்பத்
துணிந்தாய்; என்முன்
நில்லாமல், நகர்நீங்கி
ஒழிக," என்ருன்.

## ஐவர் அடைக்கலம்

எழுந்து விபீஷணன்
விண்ணில் போயினன் ;
இணைந்தனர், அமைச்சரும்
நால்வர் ஏகினர் ;
அழிந்தது வினைஎன,
ஐயன் ராமனை
அடைக்கலம் நாடினர்;
ஆழி தாண்டினர்.

அஞ்சன வண்ணனும்,
அருகில் நண்பரை
அழைத்தனன்; கருத்தினை
அறியக் கேட்டனன்.
"வஞ்சனை," என்றனர் ;
"மாயம்," என்றனர் ;
மாருதி ஒருவனே
மறுத்துச் சொல்லினன்.

"இலங்கையின் உத்தமன்,
என்னைக் காத்தவன்,
ஏந்திழை திரிஜடை
தன்னை ஈன்றவன்,

வலம்தரும் அன்பினன்;
அசுரன் ஆயினும்
வருகென ஏற்பதே
முறைமை,” என்றனன்.

## அண்ணலின் கருணை

ஐயனும் கருணை கூர்ந்தான்;
“அடைக்கலம் தருவேன்,” என்றான்.
மெய்யெலாம் இன்பம் பொங்க,
விபீஷணன் பாய்ந்து வந்தான்.

வெண்மணல் பரப்பில், நீல
மணிஎன விரிந்த சோதி
அண்ணலைக் கண்ணில் கண்டான்;
அடிமலர் நெருங்கி வீழ்ந்தான்.

## எழுவர் ஆனார்

கருமுகில் மேனி வள்ளல்
களித்தனன், இருக்கை ஈந்தான்;
“மருவிய இலங்கைச் செல்வம்
வழங்கினேன், உனக்கே!” என்றான்.

“என்பெயர் உள்ள நாளும்,
இருநிலம் இருக்கும் நாளும்,
பொன்முடி அரசு நீயே
பூணுக,” என்றான் செம்மல்.

“குகனொடும் ஐவர் ஆனோம்;
குன்றிலே அறுவர் ஆனோம்;
மகிழ்வுற, மன்னா, இந்நாள்
எழுவராய் வளர்ந்தோம்,” என்றான்.

வானரர் ஆர்த்தார், பாடி
வாழ்த்தினர்; பரந்து நின்ற
சேனையின் சிறப்பைக் காட்ட
நண்பனை அழைத்துச் சென்றார்.

## இருகரை இணைந்தது

வருணனை அழைத்தான் ஸ்ரீராமன்;
வாரிதி கடக்கும் வழிகேட்டான்.
“இருகரை இணைப்பீர், அணைகட்டி
ஏகுவீர், அதுவே திறம்,”என்றான்.

வானரச் சிற்பி, நளன்என்பான்,
வந்தனன்; வணங்கிப் பணிஏற்ருன்.
கானகம் எங்கும் படைவீரர்
கல்லொடு மலையும் பெயர்த்தனரே.

கல்லும் மணலும் கருங்குன்றும்
கடலில் குவித்தார்; அயராமல்
அல்லும் பகலும் வினைசெய்தார்;
அலைமேல் உயர்ந்த அணைகண்டார்.

சேனை நடக்கும், தனிவீரச்
செம்மை நடக்கும், அருள்நடக்கும்,
ஞானம் நடக்கும், பாலத்தை
நாதன் பார்த்தான்; மனம்குளிர்ந்தான்.



## அங்கதன் தூது

வானரரும் மனம்குளிர்ந்தார்;
கல்லணைமேல் ஏறி
வழிநடந்தார்; விபீஷணனைப்
பின்தொடர்ந்து போனார்.
தேன்மலரும் மரக்கிளையும்
குடையாக ஏந்தி,
ஸ்ரீராமன் வெயிலினிலே
வாடாமல் காத்தார்.

## இலங்கையில் பாசறை

கடல்கடந்தார்; வைதேகி
சிறைஇருந்த நாட்டில்
கரைஇறங்கி, ஆர்ப்பரித்தார்;
அருகேஓர் குன்றில்
படைவீடு நிருமித்தான்,
நளன்என்னும் சிற்பி;
பரமனுக்குப் புல்இணைத்துச்
சிறுகுடிலும் வேய்ந்தான்.

## பகை ஒற்றர்

நடுநிசியில், பகைஒற்றர்
சாரணனும் சுகனும்,
நலம்படைத்த வானரர்போல்
உருமாறி வந்தார்;

பிடிபட்டார்; கட்டுண்டார்;
அடிபட்டு நொந்தார்;
பெருமானைக் கண்டவுடன்
வாய்குழறி வீழ்ந்தார்.

இனியபிரான் அருள்கூர்ந்தான்,
விடுதலையும் செய்தான்.
"என்னுடைய திறம்அறிந்தீர்,
அரசனுக்குச் சொல்வீர்;
தனிஇலங்கை தடுமாற
மதில்உடைத்து நுழைவோம்;
தணல்குமுற, இடிவெடிக்கக்
கணைதொடுப்போம்," என்றான்.

## மாலியவான் பரிவு

அந்நேரம், ராவணனும்
கண்உறக்கம் கொள்ளாமல்,
அவையைச் சேர்ந்தான்.
"மன்னா,கேள்," எனப்பரிந்து,
மாலியவான் எனும்பாட்டன்
அறிவு சொன்னான்.

"ஆழ்கடலும் மேடாக்கி
அணைஎடுத்த பெரும்வீரர்
எல்லை வந்தார்;
வாழ்வதற்கு வழிஒன்றே,
மைதிலியைச் சிறைவிடுக,
மகனே," என்றான்.

## ஒற்றர் சேதி

குடல்தெறிக்க, ஒற்றர்களும்
கொலுநுழைந்தார், கைகட்டிக்
குறுகி நின்றூர்;
"படைகுவித்த ஜயராமன்
கருணையையும் ஆற்றலையும்
பார்த்தோம்," என்றூர்.

தோள்குலுக்கி, இலங்கையர்கோன்
விழிசுழற்றி, நிலம்அதிரச்
சுடுசொல் பேசி,
வாள்பிடித்த போர்அன்றி
மற்ருென்றும் கருதாமல்,
எழுந்து சென்ருன்.

## எதிர்எதிர் நின்றூர்

புலர்ந்தது பொழுது; கருங்கடல் அலையும்
பொன்னொளி கொண்டு மின்னிய நேரம்,
நலம்தரும் வீர ராகவன் எழுந்தான்;
நகர்வளம் காண மலைமுடி சேர்ந்தான்.

தம்பியும் சேனைத் தலைவரும் சூழத்
தயாநிதி நின்ருன்; பவளமும் முத்தும்
செம்பொனும் மணியும் வயிரமும் இழைத்த
சித்திர இலங்கை அழகெலாம் பார்த்தான்.

அசுரமன் னவனும் கோபுரம் ஏறி,
அண்ணலின் நீலத் திருமுகம் கண்டான்;
பசியொடும் திரிந்த புலிஎன உறுமிப்
பதறினன்; "கடித்துக் குதறுவேன்," என்றான்.

## சுக்ரீவன் ஆத்திரம்

விழிஎதிரே ராவணனைப்
பார்த்தவுடன் சுக்ரீவன்,
விமலனையும் கேளாமல்,
கோபுரத்தில் பாய்ந்தான்.
பழிவளர்த்த பகைஅரக்கன்
உடல்பதைக்கப் போராடிப்
பணிசிறந்த நெடுமகுட
மணிபறித்து மீண்டான்.

மீண்டவனை, ரகுவீரன்,
மெய்தழுவி, "ஐயா, நின்
வீண்பதட்டம் முறையாமோ?
தனியாக அங்கே,
ஆண்தகைநீ மாண்டிருந்தால்,
என்கணையின் வலிமைக்கும்
அரும்படையின் திறமைக்கும்
பொருள்உண்டோ?" என்றான்.

"இனியேனும், ஆத்திரமும்
விளையாட்டும் கைவிடுக,
இடம்அறிந்து செயல்புரிக,"
எனமொழிந்தான் ராமன்.
குனியாத கிஷ்கிந்தைக்
காவலனும், நாணத்தால்
குலைவாழை போலாகத்
தலைகுனிந்து நின்ருன்.

## முடி இழந்த அவமானம்

முடிஇழந்த ராவணனும்,
அவமானம் தாங்காமல்
முகம்கருகி, உடல்வேர்க்க,
அரண்மனைக்குப் போனுன்.
உடன்இருந்த அமைச்சருக்கு
விடைகொடுத்து வெளியேற்றி,
ஊண்மறந்து, நடைமெலியப்
பஞ்சணையில் வீழ்ந்தான்.

## நகர முற்றுகை

மறுநாள் உதயம் ஆகும் போதே,
வானரர், இலங்கை நகர்சூழ்ந்தார்;
சிறைபோல் நான்கு வாயிலும் ஒடுங்கச்
சேனையை வகுத்துத் தடைசெய்தார்.

அங்கதன் தெற்கே, நீலன் கிழக்கே,
அனுமான் மேற்கே, படைகொண்டார்
மங்கள ராமன் தலைமை வகிக்க,
வடக்கே வந்தான் சுக்ரீவன்.

அரக்கரும் திரண்டார்; திசைதொறும் வழியை
அடைத்தார்; மலைத்தொடர் என நின்றார்.
செருக்குற ராவணன், "வடபுறம் நானே
செல்வேன்," என்றான், தீஆனான்.

## கடைசி முயற்சி

இருபடையும் இவ்வண்ணம்
எதிர்த்த பின்னும்,
எம்பெருமான் அறநெறியை
மறவான் ஆகி,
வருகஎன அங்கதனை
அழைத்தான்; " நீபோய்
மாற்றானைக் கடைசிமுறை
காண்க," என்றான்.

" மணிநகரம் அழியாமல்
பிழைக்க இன்னும்
வழிஉண்டு; ஜானகியை
விடுக, என்பாய்.

அணிவகுத்த போர்எளிது;
அமைதி காத்தல்
அரிதென்னும் பொருள்உணர்த்தி,
மீள்க," என்ருன்.

அரைநொடியில் அங்கதனும்
வானில் சென்ருன்;
அரக்கர்குலப் பெருவேந்தன்
இருக்கை சேர்ந்தான்.
"கரியபிரான் உரைகொண்டு
வந்தேன், கேளாய்,
கலங்காத வாலிக்கும்
மகன்நான்," என்ருன்.

## ஆசைமொழி

"அந்தோ நீ!" எனப்பரிந்தான்
இலங்கைக் கோமான்;
"அரசுரிமை பறிகொடுத்தாய்;
ஏவல் ஏற்ருய்;
மைந்தா, நின் மலைநாடு
நானே மீட்பேன்;
மனம்திருந்தி என்னேடும்
சேர்க," என்ருன்.

பிழைஅற்ருன் அங்கதனும்
முறுவல் பூத்துப்
பேரறத்தின் நெறிபுகன்ருன்;
அசுரன் கேளான்.

கழனிக்கு நீர்இறைத்தால்
கரும்பு தோன்றும்;
கல்லுக்கு நீர்இறைத்தால்
புல்லும் உண்டோ?

## அங்கதன் மீண்டான்

கருநாகம் எனஎழுந்தார்,
அரக்கர் நால்வர்,
கடன்புரிந்த தூதுவனைக்
கொல்லப் பாய்ந்தார்.
விரைவாக வானரனும்
உந்தி வீழ்த்தி
விண்புகுந்தான்; தலைவனிடம்
மீண்டு போனான்.

"போர்அன்றி வேறுவழி
காணேன்," என்றான்;
புண்ணியனை அடிபணிந்து
வீரன் நின்றான்.
நீர்கொண்ட முகில்அனைய
கருணைச் செம்மல்,
நெடும்படையின் நிலைபார்த்தான்;
மதிலைப் பார்த்தான்.



## குளத்திலும் கருணை

அடித்தனர் முரசம், வானரர் பாய்ந்தார்;
அண்ணலின் திருவுளம் அறிந்தார்;
எடுத்தனர் மரமும் ஓங்கிய குன்றும்
எறிந்தனர்; அகழியைத் தூர்த்தார்.

வழிந்தது தண்ணீர்; இலங்கையின் கோட்டை
வாசலில் நுழைந்தது வெள்ளம்;
அழுந்திய தெருவில் புகலிடம் இன்றி
அலைந்தது, முதலையின் கூட்டம்.

உதைத்தனர்; எதிர்த்த காவலர் உயிரை
ஒடுக்கினர், வானர வீரர்;
குதித்தனர்; மதிலின் உச்சியில் ஏறிக்
கோடையின் இடிஎன ஆர்த்தார்.

## அசுரர் ஆரவாரம்

ஆனையின் முதுகில் பறைசாற்றி
அசுரரும் ஆர்த்தார்; படைசேர்ந்தார்;
வான்வெளி மறையக் கணைஎய்தார்;
வஞ்சக வேலும் குறிவைத்தார்.

வானரர் தடுத்தார், தடக்கையில்
　வாரிய கல்லின் மழைபெய்தார்;
ஊன்உடல் சிதறக் குருதியிலே
　உழன்றனர், அரக்கர் தலைசாய்ந்தார்.

சாய்ந்தனர் மதிலில் வானரரும்,
　தரைமிசை இறங்கிப் பின்வாங்கி,
வேந்தனை அடைந்தார்; "ஆற்றாமல்
　மீண்டனம்," என்றார், மெய்சோர்ந்தார்.

## வெற்றி வெறி

வில்லை மீட்டி அசுரர் ஆடினர்;
　வெற்றி என்று சங்கும் ஊதினர்.
வல்ல வீரர், காட்டு வெள்ளமாய்
　வாயில் தோறும் சென்று மோதினர்.

குதிரை யானை தேரும் ஓட்டினர்;
　கொடிய கையில் இடியை ஏற்றினர்;
உதிர வேட்கை கொண்டு கூவினர்;
　உவகை மிஞ்சி வெறியில் மூழ்கினர்.

## வானரர் ஆவேசம்

மனம்துடித்தான், சுக்ரீவன்
மரம்பறித்து வீசி,
வாள்அரக்கர் தலைபிளந்தான்;
எமன்உலகம் சேர்த்தான்.
சினம்பெருக, அனுமானும்
அங்கதனும் தாவித்
தென்புறமும், கீழ்மேலும்,
அரியசமர் செய்தார்.

## போர்முனையில் ராவணன்

பொல்லாத பகைவரெலாம்
புறமுதுகு காட்டிப்
போய்மறைந்தார்; எண்ணற்ற
படைத்தலைவர் மாண்டார்.
செல்லாத பழிகேட்டுத்
தென்னிலங்கை மன்னன்,
தேர்ஏறி, அனல்சொரியப்
போர்முனைக்குச் சென்றான்.

நடைசிறந்த பெருங்குதிரை
பலநூறு பூட்டி,
நாற்புறமும் கொடிஉயர,
நெடுமகுடம் மின்னக்

குடைகவிய, மணிமார்பில்
தும்பைமலர் சூடிக்
குன்றேபோல் இடக்கையில்
வில்லேந்தி நின்றான்!

## ராமன் போர்க்கோலம்

எம்பெருமான் ராகவனும்
போர்க்கோலம் கொண்டான்.
இடைஇறுக்கி, மரவுரியை
நெகிழாமல் கட்டி,
அம்பிருந்த திருக்கரத்தில்
தோல்கவசம் சுற்றி,
அணிவிரலில் உறையிட்டுப்
பசுந்துளவம் பூண்டான்.

## மீண்டும் சண்டை

மீளவும் களத்தில் சண்டை
வெடித்தது; நிருதர் வேந்தன்
தோளுற வளைத்த வில்லின்
தொனிஎழ முழக்கம் செய்தான்.

அதிர்ந்தது மலையும் மண்ணும்;
அழிந்தது படர்ந்த மேகம்;
உதிர்ந்தது நெருப்புக் கோளம்;
உலர்ந்தது நீரும் காற்றும்.

வானர அரசன் வந்தான்;
மாருதி விரைந்தான்; நின்ற
சேனையை விலக்கித் தம்பி
லக்ஷ்மணன் சீறிப் போந்தான்.

ஒருவர்பின் ஒருவ ராக,
மூவரும் காயம் உற்ருர்;
விரிசுடர் அசுரன் விட்ட
சுடுபடை தாக்கி வீழ்ந்தார்.

## களத்தில் ராமன்

சாகாத பெருவீரர்
தளர்ந்து வீழ்ந்த
சமர்க்களத்தை ரகுபதியும்
நாடிப் போனன்.
ஆகாய வீதியிலே
அமரர் கூடி,
ஐயனுக்குப் பல்லாண்டு
பாடி நின்ருர்.

பகைவேந்தன், கொடிபறந்த
தேரில் வந்தான்.
பரந்தாமன், எளியவன்போல்
தரையில் சென்ருன்.

சகியாமல் மனம்பதறி,
அனுமான் ஓடித்
"தனித்தலைவா, ஏறுக,என்
தோள்மேல்," என்றான்.

பொன்மலையில், பச்சைமுகில்
படிந்தாற் போலப்
புண்ணியனும் போய்அமர்ந்தான்;
மகிழ்ச்சி பொங்க,
மின்னலெனக் களம்எங்கும்
அனுமான் பாய்ந்தான்.
வில்வளைத்து, ஜயராமன்
அம்பும் விட்டான்.

## பறந்தது பாணம்

பறந்தது பாணம், பாய்ந்தது செந்தீ;
பதைத்தனர், ஆவி அழிந்தனர் அரக்கர்.
முறிந்தது நெடுந்தேர்; இறந்தது குதிரை;
முட்டிய களிறும் பட்டது நிலத்தில்.

## தேரிழந்த ராவணன்

ஆயிரம் கணைகள் அசுரனும் பூட்டி,
அடைமழை இடிபோல் இடையற எய்தான்.
நாயகன் ஒடித்தான்; பாவியின் வில்லும்
நடைமிகும் தேரும் மகுடமும் சிதைத்தான்.

## பெருமான் பரிவு

வல்லரக்கன், வெறுங்கையாய் மண்ணில் நின்றான்.
மழைவண்ணப் பெருமானும் பரிவு மல்க,
"நல்லறத்தின் துணைஇன்றி வெற்றி உண்டோ,
நயம்உண்டோ, புகழ்உண்டோ, தெளிக," என்றான்.

## நாளை வருக

"ஜானகியின் சிறைநீக்கி, இலங்கைச் செல்வம்
தம்பிக்கு முறையாக வழங்கி, நல்ல
வானவரின் பெரும்துயரும் தவிர்ப்பாய் ஆனால்,
மன்னித்தேன், நின்குலமும் வாழும்," என்றான்.

"அல்லாமல், போர்என்றால், வருக நாளை!
ஆயுதமும் அருந்துணையும் இழந்தாய், இன்று
கொல்லாமல் விடுகின்றேன்; செல்க," என்றான்
குவலயத்தின் இருள்தீர்த்த கருணை வீரன்.



# நாக பாணம்

சொல்இன்றித் துணைஇன்றித்
தோள்கொண்ட திமிர்இன்றி
இலங்கை வேந்தன்,
வில்இன்றி வேல்இன்றி
விண்ணுயர்ந்த தேர்இன்றி
நடந்து சென்றான்.

அரண்மனையில், மாலியவான்
அறநெறியை மறுபடியும்
அறியக் கூறிச்
"செருமுனையில் மாற்றாரின்
திறம்உணர்ந்தாய்; இனியேனும்
திருந்தாய்," என்றான்.

## மகோதரன் துணிவு

இடைமறித்து, வஞ்சகத்தில்
எதிரில்லா மகோதரனும்
அமைச்சன் வந்தான்;
"தொடருகின்ற பெரும்போரில்
சிறுதோல்வி இயற்கை," எனத்
துணிவு சொன்னான்.

“ படைஇருக்க, நகர்இருக்கப்
பகைமுடிக்க மலைபோலக்
கும்ப கர்ணன்
உடன்இருக்க, இடர்உண்டோ?
கடைசியிலே முழுவெற்றி
உனக்கே,” என்ருன்.

மாமன்னன் மனம்மகிழ்ந்தான்;
மகோதரனைக் கொண்டாடி
வாழ்த்தி நின்ருன்.
“ தீமின்னும் இளையவனைத்
துயில்எழுப்பித் தெளிவித்துக்
கொணர்க,” என்ருன்.

## கும்பகர்ணன் எழுந்தான்

உறங்கு கின்ற கும்ப கர்ணன்
உணர்வு கொள்ளவே,
இறங்கி நின்று சேனை வீரர்
இடிமு ழக்கினர்.

எழுந்த வீரன், பசியும் ஆறி
இணங்கி ஏகினன்;
அழுந்து சூலம் ஏந்தி, அண்ணன்
அடிவ ணங்கினன்.

நின்ற போரின் நிலைமை கூறி,
நெடிய ராவணன்,
"வென்று வருக," என்று வாழ்த்தி
விடையும் நல்கினன்.

கடமை கொண்டு, கும்ப கர்ணன்
கடிது போயினன்;
கொடிய சிங்கக் கொடிப றக்கக்
கோட்டை தாண்டினன்!

## லக்ஷ்மணன் எதிர்ப்பு

அரக்கர் படையும், அண்ணலின் படையும்,
ஆர்த்தன, ஆர்த்தனவே.
அம்பும், மலையும், வேலொடு மரமும்,
அதிர்ந்தன, அதிர்ந்தனவே.
உருக்கும் உலைபோல் லக்ஷ்மணன் எழுந்தான்;
ஓங்கிய கணைபூட்டி,
உதிரச் சேற்றில் அசுரனை அழுத்திச்
சூலமும் பொடிசெய்தான்.

வந்தான், கும்ப கர்ணனை மடக்க
மன்னவன் சுக்ரீவன்;
மற்போர் தொடுத்தான், இறுதியில் மயங்கி,
மண்மிசை மெய்சாய்ந்தான்.

"அந்தோ!" என்றார் வானர வீரர்;
அனைவரும் உயிர்சோர
அரக்கன் பாய்ந்தான்; அரசனைக் கௌவி
அகன்றனன், நகர்சென்றான்.

## கும்பகர்ணன் மரணம்

அறிந்தான் ராமன், கடுஞ்சினம் எரிய
அருங்கணை மழைபெய்தான்;
அசுரன் திகைக்க வழியினை மறைத்தான்;
அண்டமும் இருண்டதுவே.
எறிந்தான் மீண்டும், ஆயிரம் பாணம்;
எதிரியின் உடல்எங்கும்
எய்தான்; தலையைக் கொய்தனன்; தூக்கிக்
கார்இருட் கடல் சேர்த்தான்.

## ராவணன் சூழ்ச்சி

அந்நேரம், இலங்கையர்கோன், வஞ்சம் எண்ணி,
அசோகவனம் போய்நின்றான்; சீதை காணப்
பொன்மேனி ஜனகன்போல் உருவம் மாற்றிப்
பொய்அசுரன் ஒருவனையும் இழுத்து வந்தார்.

அநியாயம் அறியாமல் அன்னை நொந்தாள்;
"அனைவருக்கும் என்னாலே ஆறாத் துன்பம்;
இனிஏது வினைவருமோ, எந்தாய்?" என்றாள்.
இடர்கண்டு ராவணனும் முறுவல் கொண்டான்.

## அரக்கனும் அழுதான்

முறுவலித்த முடிமன்னன் முறிந்து சாய,
முகம்இருண்டு நாவுலர்ந்த தூதர் வந்தார்.
"பொறிபறந்த போர்க்களத்தில், அருமைத் தம்பி,
புகழ்படிந்த தலைஇழந்தான், ஐயா!" என்றார்.

வேர்அற்ற மேருஎன வேந்தன் வீழ்ந்தான்;
"வித்தகனே, உத்தமனே, கும்ப கர்ணா,
வீரத்தின் கொடுமுடியே, கடமை தேர்ந்த
மேலோனே!" எனஅரற்றி அழுது சோர்ந்தான்.

## அதிகாயன் சண்டை

பழிதீர்க்க, இளவரசன்
அதிகாயன் சென்றான்;
"படுகளத்தில் லக்ஷ்மணனை
உயிர்வதைப்பேன்," என்றான்.
மழைபோர்த்த வானத்தின்
இடியேறு போல,
வாள்ஏந்தி, வில்ஏந்தி,
வல்லரக்கர் ஆர்த்தார்.

கணைதொடுத்தான், இளையபிரான்,
கனல்வேகம் கொண்டான்.
கடல்எல்லாம், மலைஎல்லாம்,
களம்எல்லாம் பாணம்!

அணிபடைத்த படைவீரர்
உடல்எல்லாம் பாணம்!
அதிகாயன் தலைஅறுத்து
முடித்ததும்ஓர் பாணம்!

## இந்திரஜித்தன் சீற்றம்

சீறினன் எழுந்தான், இந்திர ஜித்தன்;
தேரினில் குதித்தான்; போர்முனை சேர்ந்தான்;
பாறைகள் எறிந்த வானரர் பதைக்கப்
பாய்ந்தனன்; சிவந்த சுடுசரம் விடுத்தான்.

அங்கதன், அனுமான், நீலனும் அயர்ந்தார்.
அலைந்தது, நடுங்கி அழிந்தது, சேனை.
செங்கனல் தெறிக்க, லக்ஷ்மணன் எதிர்த்தான்;
திக்குகள் குலுங்க, விளைந்தது கடும்போர்.

## அரவக் கணை

கதிரவன் மறைந்தான்; இரவிலே அசுரன்
கருமுகில் கடந்த வானிடை நின்று,
சதிஎழ, அரவக் கணையினை எய்தான்;
தளைபட வானரர் அனைவரும் சாய்ந்தார்.

பிணித்தது பாணம்; இளையவன் வீழ்ந்தான்.
பேரிருள் சூழ்ந்த களத்திலே கிடந்தான்.
கணத்தினில், ராமன், செஞ்சுடர் பாய்ச்சிக்
கண்டனன்; விம்மிக் கலங்கினன் உள்ளம்.

## கருடன் வந்தான்

அண்ணலின் துயரம் அறிந்ததும், கருடன்
அழகிய சிறகுகள் விரித்து,
விண்ணிலே பறந்து தோன்றினன்; தோன்ற
வீரரை விடுத்தது நாகம்.

வானரர் எழுந்தார்; வானுற முழங்கி
வள்ளலின் மலர்ப்பதம் தொழுதார்.
ஊனமும் உடம்பின் புண்களும் நீங்கி,
ஓங்கினர்; புத்துயிர் அடைந்தார்.



## மருந்து மலை

அரவவெங் கணையை ஏவிய பின்னர்,
அரண்மனை சேர்ந்தான் இந்திர ஜித்தன்.
கருகிய இலங்கைக் காவலன் கேட்டுக்
களித்தனன்; வெற்றிப் பெருமிதம் கொண்டான்.

கொண்டபேர் உவகை, கனவென மறையக்
குதித்தனர், அலைபோல் வானரர் ஆர்த்தார்.
அண்டினர் ஒற்றர்; களத்திலே நிகழ்ந்த
அதிசயம் சொன்னர்; அசுரனும் திகைத்தான்.

### சேனைத் தலைவர் அழிவு

சேனையின் தலைவர்
யாவரும் திரண்டு
சீறினர்; "பொழுது
விடிவதன் முன்னம்,
மானிடர் உயிரை
வாங்குவோம்," என்றார்;
மலைஎன நடந்து
தொடுத்தனர் கடும்போர்.

ஆர்த்தது முரசம்;
வானரர் எழுந்தார்;
அரக்கரை நொறுக்கி
ஆணவம் அழித்தார்.
நீர்க்கடல் சிவக்கப்
பாய்ந்தது குருதி;
நெடுங்களம் நெளிய
நிறைந்தன பிணங்கள்!

## மீண்டும் இந்திரஜித்தன்

கதிரவன் உதயம் ஆனான்;
கலங்கினான் இலங்கைக் கோமான்.
இதமுற, உறுதி கூற,
இந்திர ஜித்தன் வந்தான்.

ஆயிரம் சிங்கம் பூட்டி,
அணிமிகும் தேரில் ஏறிப்
போயினன்; புயலும் அஞ்சப்
போர்முனை புகுந்து நின்றான்.

## இருவர் எய்த கணை

சேனையை இருத்தி, முன்னால்
சென்றனன் வீரன் ராமன்;
தான்எனும் தனிமை இல்லாத்
தம்பியும் இணைந்து வந்தான்.

இருவரும் கணையை ஏற்றி
எய்தனர்; எரியும் தீயில்
சருகென, அரக்கர் சிக்கித்
தவித்தனர்; அலறி மாய்ந்தார்.

## இந்திரஜித்தன் தோல்வி

இந்திர ஜித்தன் தோற்ருன்;
இளையவன் அம்பு பட்டுச்
சுந்தரத் தேரும், தோளின்
கவசமும், தொலைய வீழ்ந்தான்.

நெஞ்சிலே வஞ்சம் எண்ணி,
நீங்கினுன் அசுரன் மைந்தன்;
"அஞ்சினுன்," என்று வீர
வானரர் அமைதி கொண்டார்.

பரிதியும் மறைந்தான்; தெய்வப்
படைக்கலப் பூஜை செய்யக்
கரியவன், கருணை ராமன்,
போர்க்களம் கடந்து போனுன்.

வானரர் பசியை மாற்ற,
விபீஷணன் வடக்கே சென்ருன்;
"ஆனநல் உணவு தேடி
அணுகுவேன் விரைவில்," என்ருன்.

## மலரோன் கணை

இந்திர ஜித்தன் விண்மிசை ஏறி,
இருளில் மறைந்தான், சதிசெய்தான்;
மந்திரம் ஓதி, லக்ஷ்மணன் மீது
மலரோன் கணையைக் குறிவைத்தான்.

விரைந்தன பாணம், ஆயிரம் தாக்கி
வீழ்ந்தான், அந்தோ, இளையபிரான்.
நெரிந்தனர், நின்ற வானர வீரர்
நெஞ்சம் இருண்டு, தலைசாய்ந்தார்.

## நாதன் துடித்தான்

வந்தான் ராமன், களத்தை அடைந்தான்,
இருள்நீக்கி,
மண்ணில் கிடந்த இளையோன் உடலைக்
கண்ணுற்றான்.
நைந்தான்; ஐந்து புலனும் நடுங்க,
நிலைகுன்றி,
நாதன் துடித்தான்; "நானும் வாழேன்
இனி," என்றான்.

"நீயே அன்னை! நீயே தந்தை!
நெறிநீயே!
நீயே தம்பி! நீயே மைந்தன்!
நிதிநீயே!

ஓயா அன்பின் உருவே! கண்ணைத்
திறவாயோ?
உன்னை இழந்தேன், என்னை இழந்தேன்,"
எனவீழ்ந்தான்.

## துயர் நீங்கும் வழி

ஆகாரம் சேகரித்துத்
திரும்பி வந்தான்,
அகம்குமுற, விபீஷணனும்
அவலம் பார்த்தான்.
சாகாத மாருதியின்
மூர்ச்சை நீக்கி,
ஜாம்பவனைக் குற்றுயிராய்த்
தேடிக் கண்டான்.

ஜாம்பவனும், துயர் நீங்கும்
வழியைச் சொன்னான்.
"சஞ்சீவி மூலிகையைக்
கொணர்வோம்; நச்சுப்
பாம்பணியும் பரமசிவன்
உறைந்த வெள்ளிப்
பனிமலையின் அருகாகக்
கிடைக்கும்," என்றான்.

## சஞ்சீவி வந்தது

"நானே,இப் பணிமுடிப்பேன் !"
எனஎழுந்தான், நலம்உயர
அனுமான் பாய்ந்தான்;
வானேரும் வழிஒதுங்கப்
பேருருவம் ஒளிமின்ன,
வடக்கே சென்றான்.

கயிலாய முடிகடந்தான்;
கால்ஊன்றிச் சஞ்சீவி
மலையைப் பேர்த்தான்;
அயராத தோள்இருத்தி,
ஆகாய வெளிகுலுங்க,
நொடியில் மீண்டான்!

## புது வாழ்வு

மாமருந்தின் மணம் சுமந்து
காற்று வீச,
வானரரும் இளையவனும்
உணர்வு பெற்றார்.
பூமறைந்த செடிகொடியும்,
புல்லும் கூடப்
பொலிவடைந்து, புதியநிறம்
பொருந்தக் கண்டார்.

வானகமும் மண்ணகமும்
மகிழ்ந்து போற்ற,
மாருதியை ஜயராமன்
தழுவிக் கொண்டான்.
"போனஉயிர் தந்தாய்;என்
புகழும் தந்தாய்;
புண்ணியனே! நீடூழி
வாழ்க!" என்றான்.

இடர்தீர்த்த எழில்மலையை
எடுத்து, மீண்டும்
இருந்தஇடம் நிலைநாட்ட,
அனுமான் போனான்.
படைவீரர், மடைஉடைத்த
வெள்ளம் போலப்
படுகளத்தில் ஆனந்த
முழக்கம் செய்தார்!



# இறுதி அம்பு

இந்திர ஜித்தன் கேட்டுக்
கலங்கினான்; இதயம் நொந்தான்.
"மந்திர யாகம் செய்து,
பகைவரை மாய்ப்பேன்," என்றான்.

"அரும்சமர்க் களத்தில் மாண்ட
அசுரரின் உயிரும் மீட்பேன்;
நிரம்பிய வலிமை பெற்று,
நெருப்பென நிமிர்வேன்," என்றான்.

நிகும்பலை எனும்இ டத்தில்
நிறுவினான், வேள்விக் கூடம்;
அகம்,புறம், எங்கும் காவல்
அமர்த்தினான்; நோன்பு நோற்றான்.

வேள்வியை அழிக்க, வீர
லக்ஷ்மணன் விரைந்து சென்றான்;
தூள்பட, அரக்கர் சாயச்
சொரிந்தனன் சுழலும் பாணம்.

# இந்திரஜித்தன் மரணம்

இந்திர ஜித்தனும்
காயம் எய்தினன்;
ஏறிய அம்பொடும்
இலங்கை ஏகினன்;
எந்திரத் தேர்மிசை
அமர்ந்து, மீளவும்
எல்லையில் போர்முனை
வந்து மோதினன்.

சிந்திய கணைதொறும்
புயலை ஏவினன்;
தீயுடன் கொடும்புகை
மழையை ஊற்றினன்.
அந்தர அமரரும்,
அசுரன் ஆற்றலை
அரிதென வியந்தனர்;
பூவும் தூவினர்.

அஞ்சினர் வானரர்,
அயர்ந்து வாடினர்;
ஆர்த்தனன் இளையவன்,
வெகுண்டு தாவினன்;

வெஞ்சரம் விடுத்தனன்;
தேரும் சாயவே,
விண்வழி இந்திர
ஜித்தன் ஓடினான்.

வஞ்சக அரக்கனை
மடக்கி, லக்ஷ்மணன்
வதைத்தனன்; கையினை
வெட்டி வீழ்த்தினான்.
அஞ்சன வண்ணனைப்
போற்றி, மற்றுமோர்
அம்பினால் தலையையும்
அறுத்துத் தள்ளினான்.

## பெற்றோர் புலம்பல்

அருமைப் புதல்வன் சிரம்இழந்த
அவலம் கேட்டான், இலங்கையர்கோன்.
பெருகும் குருதி வெள்ளத்தில்,
பிள்ளை கிடந்த நிலைகண்டான்.

கண்டான் மன்னன், வாய்விட்டுக்
கதறி அழுதான்; ஈன்றெடுத்த
மண்டோ தரியும் கணைபட்ட
மயில்போல், மண்ணில் அடிசாய்ந்தாள்.

"அந்தோ, மகனே! ஆரமுதே!
ஐயா! அரசே! என்னுயிரின்
நந்தா விளக்கே!" எனஅரற்றி
நங்கை துடித்தாள்; செயல்அற்ருள்.

## மூலபலச் சேனை

மண்ணுலகில் உயிர்படைத்த
அரக்கர்எலாம் நொந்தார்;
"மானிடரைப் பழிதீர்ப்போம்,"
எனத்திரண்டு வந்தார்.
விண்ணுயர்ந்த கோபுரத்தில்
ராவணனும் ஏறி,
வெள்ளம்போல் அலைபுரண்ட
பெரும்படையைப் பார்த்தான்.

அலைகடலும் மலைமுடியும்
குடிபுகுந்து வாழ்வார்;
அனல்செறிந்த பாலையிலும்
உடல்கொழுத்து நிற்பார்;
கொலைபடிந்த கூர்வேலும்
கொடுவாளும் கொண்டார்;
குவலயத்தை ஒருகையால்
நிலைகெடுக்க வல்லார்.

அனைவரையும், தென்னிலங்கை
அரசர்பிரான் வாழ்த்தி,
அகம்குளிர்ந்தான் ; மூலபலச்
சேனையையும் கூட்டி,
"வினைபுரிவீர் ; ராமனையும்
தம்பியையும் வெல்வீர் ;
வேறுபட வானரரை
நான்எதிர்ப்பேன்," என்றான்.

## வானரர் நடுக்கம்

எழுந்தது கொடிய சேனை ;
இருண்டது தெளிந்த வானம்;
குழிந்தது நடந்த பூமி ;
குலைந்தது குளிர்ந்த தென்றல்.

வானரர் கண்டார்; சென்று
மறைந்தனர்; பயந்து வீழ்ந்தார்.
ஜானகி நாதன் தேற்றிச்
"சஞ்சலம் தவிர்ப்பீர்," என்றான்.

## அற்புதப் போர்

வில்லினைத் தொழுது வாங்கிப்
பூட்டினான், வீரர் வீரன்;
கல்லெனத் திரண்ட தோளில்
கவசமும் அணிந்து சென்றான்.

ஆயிரம் கைகள் கூடி
இரண்டுகை ஆன தேபோல்,
தூயவன் விநாடி தோறும்
சொரிந்தனன், கணைகள் கோடி.

அரக்கரின் ஆக்கை மீதும்,
ஆனையின் மீதும், தேரில்
பொருத்திய உருளை மீதும்,
புரவியின் மீதும், எய்தான்.

தீயர்தம் முன்னும் பின்னும்,
செருக்களம் எங்கும் ராமன்
ஆயினன்; சுழன்று சுற்றி,
ஒருவனே ஆட்சி பூண்டான்.

## அசுரர் சிதைவு

உருண்டனர் மாற்றார்; மண்ணில்
உயர்ந்தது பிணத்தின் குன்றம்;
மருண்டனர் எஞ்சி நின்றார்;
மறுகினர்; ஓட்டம் கொண்டார்.

அம்பினால் வேலி கட்டித்
தடுத்தனன், அயோத்தி மன்னன்.
வெம்பினர், அசுரர் எல்லாம்
சிக்கினர்; மெலிந்து மாண்டார்.

தலைமகன் களத்தை விட்டுத்
தம்பியைத் தேடிப் போனான்.
மலர்மழை தூவி வாழ்த்தி,
வானவர் வருத்தம் தீர்ந்தார்.

## கொலை முயற்சி

போர்முகத்தின் மறுபுறத்தில்,
வானரரைப் போய்எதிர்த்தான்
இலங்கை வேந்தன்.
கூர்பிடித்த வேல்விடுத்து
விபீஷணனைக் கொலைசெய்ய
முயன்று தோற்றான்.

ஊர்திரும்பிச் சிறுபொழுது,
மாளிகையில் உடல்ஆறி
இருந்த நேரம்,
பார்உலகின் அசுரர்எலாம்
படுகளத்தில் பலியான
துயரம் கேட்டான்.

## பெருந்தேரில் ராவணன்

வருகஎனப் பெருந்தேரை
வரவழைத்தான்; அணிபணிகள்
பூண்டு, மீண்டும்,
செருமுனைக்குப் புறப்பட்டான்;
சிவனுடைய திருப்பாதம்
சிந்தை சேர்த்தான்.

## ராமனுக்கும் ஒரு தேர்

ஸ்ரீராமன் இமைப்பொழுதில்
சிலைவளைத்து நாண்ஏற்றிச்
சித்தம் ஆனான்.
தீராத உரிமையுடன்,
தேர்ஒன்று வானவர்கோன்
அனுப்பி வைத்தான்.

## சலியாத சண்டை

நல்லறத்தைத் தீயவினை
எதிர்த்தாற் போல,
நாயகனை ராவணனும்
எதிர்க்க வந்தான்.
நெல்உயரக் களைபறிக்கும்
உழவன் என்ன,
நெடியபிரான் கோதண்டம்
எடுத்துச் சென்றான்.

அரைநொடியில், இலங்கையர்கோன்
விண்ணும் மண்ணும்
அனல்சூழ, ஒருகோடிப்
படைகள் பெய்தான்.

திருமடந்தை மணவாளன்
சீறிப் பாய்ந்து,
சிலைசெலுத்தி, மாற்றானை
வளைத்துக் கொண்டான்.

போர்அறிந்த வல்லரக்கன்
நெஞ்சம் குன்றிப்
புண்ணுக, எம்பெருமான்
இடியை வார்த்தான்.
தார்அணிந்த தோள்அறுத்தான்,
தலையும் கொய்தான்;
சலியாமல் அவைமீண்டும்
வளரக் கண்டான்.

## ராவணன் மரணம்

பொல்லாத மாயத்தை
மாய்ப்பேன் என்றான்;
புகழ்வீரன் அயனுடைய
கணையை எய்தான்.
நில்லாமல் கூர்அம்பு
நெஞ்சில் பாய,
நிலைகவிழ்ந்து, ராவணனும்
நிலத்தில் வீழ்ந்தான்.

மனம்அடங்கச், செயல்அடங்க,
முயன்று பெற்ற
வரம்அடங்க, உயிர்அடங்க,
அரக்கன் மாய்ந்தான்.
சினம்அடங்கி, ஜயராமன்
கருணை பூத்துச்
செருக்களமும் பசுமையுற
நடந்து வந்தான்.

ஆர்க்கின்ற வானவர்பூ
மாரி தூவ,
அவனிமகள் சுமைதீர்ந்து
பொலிவு பொங்க,
வார்க்கின்ற ஆனந்தக்
கண்ணீ ரோடும்
வானரர்கள் நாயகனை
வாழ்த்தி நின்றார்.

## உயிர் நீத்த உத்தமி

மந்தோதரி வந்தாள்;
மன்னன்முகம் கண்டாள்;
வெந்தாள்;உடல் மீதில்
வீழ்ந்தாள்;உயிர் விட்டாள்!

வாழும்ஒரு தம்பி
வந்தான்;பகை மாறி
ஆழும்துயர் கொண்டான்;
"ஐயோ," என நொந்தான்.

ஐயன்,ஜய ராமன்,
அன்பேநெறி ஆனான்,
"செய்யும்கடன் எல்லாம்
செய்வீர்,இனி," என்றான்.



## முடிசூட்டு விழா

சிறைஇருந்த முனிவர்களும்
தேவர்களும் தளை நீங்கி,
இறையவனை வலம்வந்தார் ;
இணையடியே துணைஎன்றார்.

பகைவளர்த்த தென்னிலங்கை,
பழிதீர்ந்து, பரந்தாமன்
புகழ்வளர்க்கும் நிலையம்எனப்
புதியஎழில் பூண்டதுவே.

## விபீஷணன் முடிபுனைதல்

உதித்தசுடர் ஞாயிறுபோல்,
ஊர்புகுந்தான் இளையபிரான்;
விதித்தமுறை தவறாமல்
விபீஷணற்கு முடிபுனைந்தான்.

நாயகனும் நண்பனுக்கு
நல்லறத்தின் நயம்உரைத்தான்.
வாய்குளிர, "நீடூழி
வாழ்க,"என அருள்புரிந்தான்.

## மங்கல வார்த்தை

மாருதி விரைந்தான்; சீதை
வருந்திய சோலை சேர்ந்தான்.
மலர்முகம் கண்டு போற்றி,
மங்கள வார்த்தை சொன்னான்.
"கார்முகில் அனைய மேனி
வீரனே போரில் வென்றான்;
கடுந்தொழில் அரக்கன் நெஞ்சம்
உடைந்தனன், களத்தில்," என்றான்.

"சோபனம், மிதிலைச் செல்வி!
சோபனம், உலகத் தாயே!
சோபனம், கற்பின் சோதி!
சோபனம், கருணை வாழ்வே!
சோபனம், அறத்தின் தேவி!
சோபனம், கமல வல்லி!
சோபனம்," என்று பாடி,
ஆடினான், காற்றின் மைந்தன்.

"தூய்மை நீ! மென்மை நீயே!
துணிவுநீ! பணிவு நீயே!
சுடுபகை முடித்த எம்மான்
மார்பிலே கவசம் நீயே!

தாய்மைநீ ! பொறுமை நீயே!
தயவுநீ! சாந்தி நீயே!
சத்தியம் தருமம் என்னும்
தத்துவம் நீயே!" என்றான்.

## சீதைக்கு ஏற்பனை

இலங்கையின் புதிய மன்னன்
எய்தினன்; தொழுது நின்றான்;
"எம்பிரான் அழைத்தான், தாயே,
ஏறுக, விமானம்," என்றான்.
நலம்பெற வான மாதர்
நங்கையின் கூந்தல் வாரி,
நறுந்துகில் அணிந்து, மென்பூச்
சூட்டினர்; காப்பும் இட்டார்.

## தலைவனை அடைந்தாள்

பறந்தனள் சீதை, பெருநகர் கடந்து
பாசறை சேர்ந்தாள், கண்ணுற்றாள் ;
வெறும்தரை விளங்கப் பசும்கதிர் விரித்து
வில்லொடும் நின்றான் ஜயராமன்!

மண்மிசை இறங்கி, நடந்தனள் அன்னை ;
மன்னிய கற்பின் சுடர்பட்டுத்
திண்ணிய நெருப்புக் கடவுளும் தேய்ந்தான் ;
தேவியை வாழ்த்திக் கைதொழுதான்.

தன்உயிர் ஆன தலைவனை நெருங்கி,
ஜானகி வீழ்ந்தாள்; திருவடியைப்
பொன்விழி நீரில் கழுவினள்; விம்மிப்
புனிதனும் எடுத்தான்; துணைசேர்ந்தான்.

## அயோத்திக்குப் பயணம்

அன்றேதான் பதினன்கு
வருஷம் தீர்ந்த
அருமையையும், ஸ்ரீராமன்
அறிந்து தேர்ந்தான்.
"கன்றேபோல், வழிபார்த்துப்
பரத நம்பி
காத்திருப்பான்; அயோத்திநகர்
செல்வோம்," என்றான்.

அரக்கர்களும் வானரரும்
அழுது தேம்பி,
"ஐயா, நின் அடிதொடர
அருள்வாய்; அங்கே
திருக்கொலுவில், நீமகுடம்
சூடி நிற்கும்
சீர்கண்டு, விழிகுளிர்ந்து,
மீள்வோம்," என்றார்.

எல்லாரும் புஷ்பகமாம்
ஊர்தி ஏறி,
இடம்கொண்டார்; கடல்கடந்து
விண்ணில் போனார்.
கல்லான அணைகாட்டிக்
காடு காட்டிக்
கணைவீரன், ஜானகிக்குக்
கதைகள் சொன்னான்.

காவிரியும் பஞ்சவடிப்
பொழிலும் தாண்டிக்
கார்படிந்த தண்டகத்து
வனங்கள் தாண்டி,
வாவிகளும் குன்றுகளும்
வயலும் தாண்டி,
வடதிசையில் கங்கைவெளி
வந்து சேர்ந்தார்.

## வழியில் விருந்து

மெய்உணர்ந்த பரத்வாஜ முனிவர் கோமான்,
விமானத்தைக் கீழ்இறக்கி, ஆசி கூறி,
ஐயனுக்கும் உடன்இருந்த அரசர், வீரர்
அனைவருக்கும் நல்விருந்து படைப்பேன், என்றான்.

இனியபிரான் பரதனையே கருத்தில் கொண்டான்;
இடைநேர்ந்த தாமதத்தை எடுத்துச் சொல்ல
அனுமனை,“முன் செல்க,”என அருளிச் செய்தான்;
அடையாள மோதிரமும் கையில் ஈந்தான்.

## பரதன் தவிப்பு

இவைஏதும் அறியாமல்,
கோசலத்தின் புகழ்மைந்தன்
பரதன் நொந்தான்.
எதிர்பார்த்த திருநாளில்
அண்ணன்வரக் காணுமல்
இதயம் வெந்தான்.
அவையோரும் அன்னையரும்
இதம்உரைத்தும் கேளாமல்
அனலை மூட்டி,
“ ஆருயிரின் சுமைதீர்ப்பேன்,”
எனஎழுந்தான் ; வலம்வந்து
குதிக்கப் போனான்.

## நில்லென்ற குரல்

“நில்,”என்ற குரல்உயர,
நெடுவானில் குன்றேபோல்
அனுமான் வந்தான்.
“ நிகர்இல்லாய், நின்தமையன்
வருகின்றான்,” எனநெருப்பை
அழித்து நின்றான்.

வில்லொன்ருல் போர்அசுரன்
வேர்அறுத்த சீராளன்
வேகம் சொல்லி,
“விமலன்கை மோதிரமும்
காண்க,”என அத்தாட்சி
எடுத்துத் தந்தான்.

கண்டவுடன் முகம்மலர,
அகம்மலர, உயிர்மலரப்
பரதன் பொங்கிக்
கைகுவித்தான்; “நான்வளர்த்த
கடுநோன்பின் பயன்இன்றே
அடைந்தேன்,” என்ருன்.
அண்டமிசை, அதிவிரைவில்
அண்ணலுடன் புஷ்பகமும்
அணுகித் தோன்ற,
அயோத்திநகர் மக்களெலாம்
எதிர்கொண்டார்; ஆனந்த
அமுதம் உண்டார்.

அன்னையர்கள் அரவணைத்தார்;
மூவரையும் ஆர்வம்எழ
உச்சி மோந்தார்.
அருள்கனிந்த குலகுருவும்
அமைச்சர்களும் முன்வந்து
முகமன் சொன்ஞர்.

பின்பிறந்த பெருமையுடன்,
தம்பியர்கள் பெருவீரன்
மருங்கு சூழ்ந்தார்.
பிறவாத அமரர்களும்
விண்ணிருந்து கற்பகப்பூ
மாரி பெய்தார்.

## அயோத்தி சேர்ந்தார்

பாதுகை இருந்த நந்தியம் பதியில்
பரமனும் தவஉரு மாற்றி,
ஆதரம் பெருகத் தேர்மிசை ஏறி,
அயோத்திமா நகரமே சேர்ந்தான்.

கோமகன் மகுடம் புனைய,ஓர் நன்னாள்
குறித்தனன், குலகுரு வசிஷ்டன்.
பூமியின் எல்லை தாண்டியும் தூதர்
போயினர்; சேதியைச் சொன்னர்.

நவமணி இழைத்து மண்டபம் அமைக்க
நண்ணினன், மயன்எனும் சிற்பி.
அவனியில் சிறந்த புண்ணிய தீர்த்தம்
அனைத்தையும், மாருதி கொணர்ந்தான்.

# அரியணையில் ராமன்

மஞ்சனம் ஆடிப் பேரிகை தொடர,
மனைதொறும் ஆரதி எடுக்க,
அஞ்சன முகில்போல் சங்குகள் முழங்க,
அரியணை ஏறினான் ராமன்!

தனிப்பெரும் பரதன் வெண்குடை ஏந்தத்
தம்பியர் சாமரை வீச,
வனப்பொடும் அனுமான் திருவடி தாங்க,
வசிஷ்டனே சூட்டினான் மகுடம்!

மன்னவன் சிரத்தில் மணிமுடி விளங்க,
வையக மக்களும் தமது
சென்னியில் மகுடம் சேர்ந்ததே போலச்
சிறந்தனர்; உவகையில் வாழ்ந்தார்!

